# செந்தமிழ்

தொகுதி : 97 திருவள்ளுவர் ஆண்டு 2034 பிப்ரவரி 2003 பகுதி :2

திங்கள் இதழ்




ஆசிரியர் இரா. அழகுமலை எம்.ஏ.,எம்.ஃபில்.,
பதிப்பாசிரியர் இரா. சதாசிவம் எம்.ஏ.,எம்.ஃபில்.,
மதுரைத் தமிழ்ச்சங்கம், மதுரை - 1.

## தமிழ்ச் சங்க ஆட்சிக் குழு

| | |
|---|---|
| முகவை மன்னர் திரு.நா. குமரன் சேதுபதி | தலைவர் |
| திருமதி. இராணி இலட்சுமி நாச்சியார் | துணைத்தலைவர் |
| திரு. இரா. அழகுமலை | செயலாளர் |
| திரு. மா. சங்கர பாண்டியன் | உறுப்பினர் |
| திரு. டாக்டர். ந. சேதுராமன் | உறுப்பினர் |
| திரு. எம்.பி.ஆர். மலையாண்டி என்ற அசோக் | உறுப்பினர் |
| திரு.ச. பரங்குன்றம் | உறுப்பினர் |
| திரு. வே. திருவரங்கராசன் | உறுப்பினர் |
| திரு. இரா.குருசாமி | உறுப்பினர் |
| திரு. க. முத்தையா பசும்பொன் | உறுப்பினர் |
| திரு. இரா. கண்ணன் | உறுப்பினர் |
| திரு. சோ. இராமகுரு | உறுப்பினர் |

## கல்லூரிக்குழு

| | |
|---|---|
| டாக்டர்.திரு.என்.சேதுராமன், M.S.,MCh.,(URO).,M.N.M.S.(URO).,FICS., | தலைவர் |
| திரு. மா.சங்கரபாண்டியன்,பி.ஏ., பி.எல் | செயலாளர் |
| திரு. இரா.அழகுமலை, எம்.ஏ.,எம்.ஃபில்., | உறுப்பினர் |
| திருமதி. ராணி இலட்சுமி நாச்சியார் | உறுப்பினர் |
| திரு. எம்.பி.ஆர்.மலையாண்டி (எ) அசோகட, பி.எல்., | உறுப்பினர் |
| திரு. எஸ்.பரங்குன்றம், பி.ஏ. | உறுப்பினர் |
| திரு. இரா.குருசாமி, பி.ஏ., | உறுப்பினர் |
| திரு. சோ.இராமகுரு | உறுப்பினர் |
| திரு. க. முத்தையா பசும்பொன் | உறுப்பினர் |
| டாக்டர் திரு. நா.பாலுசாமி, எம்.ஏ.,பி.எல்.,எம்.லிட்.,பி.எச்டி., | உறுப்பினர் |
| திருமதி. வாசுகி இராஜா, எம்.எஸ்.சி.,எம்ஃபில்., | உறுப்பினர் |
| டாக்டர்.திரு. செ.கந்தசாமி, எம்:ஏ.,பிஎச்.டி., | உறுப்பினர் |
| டாக்டர்.திரு. க.சின்னப்பா, எம்.ஏ.,பி.எச்.டி., | உறுப்பினர் |
| டாக்டர்.திருமதி. கிரிஜா பிதியதர்சினி, எம்.ஏ., பிஎச்.டி.,டிப்.லிட்.,பி.ஜி.டிப்., ஜர்னலிசம் | உறுப்பினர் |

# செந்தமிழ்

தொகுதி : 97 திருவள்ளுவர் ஆண்டு 2034 பிப்ரவரி 2003 பகுதி :2

## திங்கள் இதழ்




| இதழ் கட்டணம் | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|
| ஆண்டுக்கட்டணம் | ரூ. 60 | ரூ. 600 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000 | ரூ. 2000 |
| தனி இதழ் கட்டணம் | ரூ. 6 | |

ஆசிரியர் இரா. அழகுமலை எம்.ஏ.,எம்.ஃபில்.,
பதிப்பாசிரியர் இரா. சதாசிவம் எம்.ஏ.,எம்.ஃபில்.,
மதுரைத் தமிழ்ச்சங்கம், மதுரை - 1.

# பொருளடக்கம்

# இதழ் மணம்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் படிப்பவரின்றிச் சிதறுண்டு கிடந்த தமிழ் இலக்கியப்பரப்பை ஒன்றுசேர்த்துத் தமிழ்ப்புலவர்களை இணைத்துத் தமிழ் வளர்ச்சிக்குரிய நூலகம், அச்சுயந்திரசாலை, தமிழ்ப்பட்டப்படிப்பு, பதிப்புத்துறை, ஆராய்ச்சித்துறைஎனத்திட்டமிட்டு தமிழ்ச்சங்கத்தை பாண்டித்துரைத்தேவர் அவர்கள் இராமநாதபுரம் சேதுபதி மன்னர் பாசுகர சேதுபதி அவர்கள் முன்னிலையில் மதுரையில் அரிதின் முயன்று பெரும்பொருள் கொண்டு தொடங்கினார்கள். அற்றை நாளில் தமிழ் உலகம் இதனை நம்பவில்லை. நம்பமுடியாத அருஞ்செயலைப் பாண்டித்துரைத்தேவர்தம் அறிவுத்திறத்தாலும் உழைப்பாலும் தமிழறிஞர்களுடன் அவருக்குகிருந்த நெருக்கத்தாலும் நடத்திக் காட்டினார்.

இந்த அரிய செயலை பாவேந்தர் பாரதிதாசன் தமக்கே உரிய செம்மாப்புடன் பதிவு செய்கிறார். "*இனியுமோர் தமிழ்ச்சங்கம்*" என்றும் பாரதிதாசன் பாடல் இடம்பெறுகிறது.

பேராசிரியர் டாக்டர் அ.பாஸ்கரபால்பாண்டியன் திருச்செந்தூரிலிருந்து "*திருநெல்வேலிக் கல்வெட்டு*" என்னும் தலைப்பில் கல்வெட்டுக்கள் தோன்றிய சூழல், காரணங்களைத் தெளிவுபடுத்துகிறார். நம்முன்னோர்கள் பரம்பரைக்கு விட்டுச் செல்லும் அரிய பதிவுகள் கல்வெட்டுக்கள்.

பேராசிரியர் டாக்டர்.சுப.அண்ணாமலை அவர்கள் திருவெம்பாவையில் முனைப்பழம் பொருட்கும் என்று தொடங்கும் ஒன்பதாம் திருப்பாடலை விளக்கியருளுகின்றார். சென்ற இதழில் வெளிவந்த பேராசிரியர் ம.ரா.போ. குருசாமி அவர்களுடைய கட்டுரையின் பிற்பகுதி இவ்விதழில் இடம் பெறுகிறது.

பேராசிரியர் டாக்டர் நா.பாலுச்சாமி அவர்கள் எழுதிய திருக்குறள் உணர்த்தும் சித்தாந்த சமயம் என்னும் கட்டுரை இடம் பெறுகிறது. சித்தாந்தக் கருத்துக்கள் திருக்குறள் முழுவதும் காணப்படுவதை ஆராய்ந்து தெளிந்த நடையில் கற்போர் உள்ளம் கொள்ளுமாறு எடுத்துரைக்கிறார்.

முனைவர் தி.நெல்லையப்பன் அவர்கள் க.வெள்ளை

வாரணனாரின் ஆய்தக்கொள்கை என்னும் தலைப்பில் தமிழ் இலக்கணத்தில் சார்பெழுத்துக்கள் குறித்த ஆய்வை எழுதியுள்ளார்கள்.

முனைவர் தி. நெல்லையப்பன் அவர்கள் நடுநாட்டில் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்று கிறார்கள். அவர்கள் செந்தமிழ் இதழ் உறுப்பினர்களாக பதின்மரைச் சேர்த்துள்ளார்கள். அதனுடன் அவர்கள் புரவலராகியுள்ளார்கள். தமிழ்கூறும் நல்லுலகத்தில் தமிழ் ஆய்வுக்கென்று நடைபெறும் இதழ் செந்தமிழ்; இவ்விதழ் வணிக விளம்பரம் ஏதுமின்றி உறுப்பினர்களுடைய நல்லாதரவுடன் நடைபெறுவதால் தமிழகமெங்கும் உள்ள தமிழ் ஆர்வலர்கள் செந்தமிழ் உறுப்பினர் சேர்க்கையில் முனைவர் தி.நெல்லையப்பன்அவர்களைப்போல முயற்சி மேற்கொள்ள வேண்டுகிறேன்.

அவர்கள் முயன்று சேர்த்த செந்தமிழ் புதிய உறுப்பினர்கள்

1. முனைவர் தெ. மேகநாதன், மஞ்சக்கொல்லை, புவனகிரி.
2. பேராசிரியர் திருமதி. மலர்விழி, சிதம்பரம்.
3. பேராசிரியர் நவசக்திதிருஞானகுமார், சிதம்பரம்.
4. முனைவர் கோ. பிலவேந்திரன், சிதம்பரம்.
5. முனைவர் ப. வீரப்பன், அண்ணாமலைநகர்.
6. முனைவர் க. அன்பழகன், கரந்தை, தஞ்சாவூர்.
7. பேராசிரியர் க அன்பு, அண்ணாமலை நகர்.
8. பேராசிரியர் இரா. சதாசிவம், அண்ணாமலை நகர்.
9. பேராசிரியர் பி. மீனாம்பாள், மதுரை.
10. பேராசிரியர் வே. மகாலிங்கம், மேலூர்.

அனைவருக்கும் எம் வாழ்த்துக்கள்

**பதிப்பாசிரியர்**

# நம்பவே இல்லை

*பாவேந்தர் பாரதிதாசன்*

இனியுமோர் தமிழ்ச் சங்கம் காண்பேன்
இருந்த முதலிடை கடைச் சங்கம் போலவே
எனச் சொன்ன பாண்டித்துரைத் தேவன் சொல்லை
இவ்வையம் அந்நாளில் நம்பவே இல்லை

இனியுமோர் தமிழ்ச் சங்கம்

வியந்தது வையம் சென்ற நாள் சிலவே
விரிந்தது மதுரைச் தமிழ்ச் சங்க நிலவே
அயர்ந்த தமிழரின் ஆடலும் பாடலும்
அறிவின் செயலும் மிளிர்ந்தன பலவே

இனியுமோர் தமிழ்ச் சங்கம்

புலவர் வகுப்பு மூன்று படைத்தான்
புன்மையின் மடமையின் என்பை உடைத்தான்
பல தமிழிலக்கிய மாசு துடைத்தான்
பாண்டித்துரைத் தேவன் புகழ்க்கொடி எடுத்தான்

இனியுமோர் தமிழ்ச் சங்கம்

# திருநெல்வேலிக் கல்வெட்டு

*டாக்டர் அ.பாஸ்கர பால் பாண்டியன்*
*திருச்செந்தூர்*

"தென்றல் வந்துலாவும் திருநெல்வேலி" "திக்கெல்லாம் புகழுறும் திருநெல்வேலி" "சிந்து பூந்துறையுடைய திருநெல்வேலி" "திங்கள் நாள் விழா மல்கு திருநெல்வேலி" என்று திருநெல்வேலியும் "திருநெல்வேலி உறை செல்வர்" என்று திருநெல்வேலி இறைவரும் திருஞானசம்பந்தரால் போற்றப்படுவர். "தமிழ்த் திருநாட்டுப் புறம்பனை சூழ் நெல்வேலி" என்று குறிப்பிடுவார் சேக்கிழார். சாலிப்பதி என்று இவ்வூரைப் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் பாடியுள்ளார்.

திருநெல்வேலியில் கோயில் கொண்டுள்ள காந்திமதி அன்னையைப் பாடும் பொழுது,

"தாரார் இமவான் தடமார்பில்
தவழும் குழந்தாய் வருகவே
சாலிப் பதிவாழ் காந்திமதித்
தாயே வருக வருகவே!"

என்று குறிப்பிட்டுள்ளமை எண்ணத்தக்கது. திருநெல்வேலி இறைவனும் "*சாலிவாதீஸ்வரன்*" என்று அழைக்கப்படுகிறார். (M. William, Religious thought and Life in India) "நெல்வேலி" என்று இலக்கியமும் கல்வெட்டும் கூறும் ஊர் திருநெல்வேலியே என்பார் கே.ர.நீலகண்ட சாஸ்திரியார்.

நெல்வேலியில் பாண்டியர் சேரரை வென்ற செய்தி கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது.

"சூழியானை செலவுந்திப்
பாழி வாயமர் கடந்து
வில்வேலிக் கடற் றானை
நெல்வேலிச் செருவென்றும்"

என்கிறது வேள்விக்குடிச் செப்பேடு. (Ep. India, Vol XVII No.16) வேள்விக்குடிச் செப்பேடு பெற்ற பாண்டிய மன்னன் 'நெல்வேலிச் செருவென்ற, நெடுமாறன்' என்றும் 'அரிகேசரி' என்றும் அழைக்கப்படுபவன்; 'நிறை கொண்ட சிந்தையன்

நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன்" என்று இம்மன்னனைத் திருத்தொண்டத்தொகை குறிப்பிடுகிறது.

பராங்குசன் என்னும் பாண்டிய மன்னன் சேரரை நெல்வேலியில் வெற்றி பெற்ற செய்தியைச் சின்னமனூர்ச் செப்பேடு கூறுகிறது(S.I.I. VOL III , P. 451) "வில்லவனை நெல்வேலியும் விரிபொழிற் சங்கரமங்கைப் பல்லவனையும் புறங்கண்ட பராங்குசன் பஞ்சவர் தோன்றல்" என்கிறது சின்னமனூர்ச் செப்பேடு.

"எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ குலசேகர பாண்டியன்" என்று அழைக்கப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் சேரன் சோழன் ஆகியோரை வென்று கைப்பற்றிய செல்வத்தால் திருநெல்வேலித் திருக்கோயிலுக்குச் சுற்றுமாளிகை எடுப்பித்தான் என்கிறது திருநெல்வேலித் திருக்கோயிலில் உள்ள கல்வெட்டொன்று (526/1926)

இத்திருக்கோயிலில் உள்ள கோமாறஞ்சடையன் என்னும் மன்னனது கல்வெட்டொன்று தேவரடியாராகிய சாத்த நம்மை என்னும் பெண்ணைக் குறிப்பிடுகிறது. (55/1927) திருநெல்வேலித் திரு இறைவர்க்குத் திருவிளக்கு ஏற்றுவதற்காக நாள்தோறும் ஆழாக்கு நெய் ஊற்றுவதற்காக இப்பெண் பசுக்களைத் தானமாகக் கொடுத்துள்ளார். பசுவைப் பெற்றுக் கொண்டு நெய் ஊற்றியவன் வெட்டிக்குடி எட்டி சாதவேதன் என்றும் கல்வெட்டு கூறுகிறது. திருநெல்வேலித் திருக்கோயிலில் தேவரடியார் இருந்ததாகவும் அவர்கள் தானங்கள் வழங்குதற்கு உரிமை உடையவர்களாக விளங்கினார்கள் என்பதும் இதனால் தெரியவருகிறது. தேவரடியார்கள் "தளிச் சேரிப் பெண்டிர்" என்றும் அழைக்கப்பட்டார்கள். சிவன் கோயில் தளிப் பெண்டிர் 'ரிஷபத் தளியிலார்' என்றும் வைணவக் கோயில் தளிப்பெண்டிர் "ஸ்ரீ வைஷ்ணவ மாணிக்கம்" என்றும் அழைக்கப்பட்டனர்.

கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை ஆட்சிபுரிந்த முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் சேரன், சோழன், போசளன் ஆகிய மன்னர்களை வென்று மிகுதியான

பொருட்களை அவர்களிடமிருந்து கைப்பற்றினான். அப்பொருட்களைக் கொண்டு நெல்லையப்பர் திருக்கோயிலில் திருச்சுற்றுமாளிகை எடுப்பித்தான் என்கிறது இக்கோயில் கல்வெட்டு ஒன்று (29/1927)

பகை மன்னர்களை வென்று பெற்ற திரைப் பொருட்கள் மற்றும் கைப்பற்றிய பொருட்களைக் கொண்டு திருக்கோயில் திருப்பணிகளை மேற்கொள்வது மன்னர்களின் வழக்கமாக இருந்துள்ளது.

திருநெல்வேலிச் சைவமடம் பற்றிய குறிப்பும் நெல்லையப்பர் கோயிற் கல்வெட்டில் காணப்படுகிறது. (131, 132,/1894) இம்மடத்;தைச் சேர்ந்த இருவர் ஆண்டுதோறும் ஆத்தூர்க்குச் சென்று வைகாசி விழாவில் திருஞானம் ஓதுவார்கள் என்றும் இவர்கள் உணவுக்காக ஒருவேலி 8 மா அளவுள்ள நிலம் மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தர பாண்டியனின் 15-ஆவது ஆட்சியாண்டில் வழங்கப்பட்டது என்றும் கூறுகிறது.

பாண்டிய நாட்டைப் புகழின் உச்சியில் அமர்த்திய முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டொன்று இக்கோயிலில் உள்ளது. கி.பி.1236 ஐச் சேர்ந்தது இக்கல்வெட்டு.

"பூமருவிய திருமடந்தையும்
புவிமடந்தையும் புயத்திருப்ப"

என்ற மெய்க்கீர்த்தியுடன் கல்வெட்டு தொடங்குகிறது. இதற்கு அடுத்துப் பாண்டிய அரசனின் நல்லாட்சி சித்தரிக்கப்படுகிறது.

மூவகைத் தமிழும், நால்வகை வேதமும், ஐவகை வேள்வியும், அறுவகைச் சமயமும், எழுவகைப்பாடலும் வளர்ச்சிபெற்றன என்கிறது.

கொங்கணர், கலிங்கர், கோசலர், மாளுவர், சிங்களர், தெலிங்கர், சீனர், குச்சரர், வில்லவர், மாகதர், விக்கலர், செம்பியர், பல்லவர் ஆகியவர்களை வென்று பாண்டியன் திறைப்பொருள் பலவற்றைக் கைக் கொண்டான் என்றும் குறிப்பிடுகிறது.

இக்கல்வெட்டின் பிற்பகுதியில் மன்னன் அளித்த இறையிலியும் நிவந்தங்களும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

"மழவராயன்" என்னும் பெயருடைய ஆசனத்தில் அமர்ந்திருந்து பல்வேறு தானங்கள் வழங்கினான் அரசன். தான் பிறந்த சதய நாளில் நெல்லையப்பருக்குப் பல்வேறு சிறப்புப் பூசைகள் நடத்துவதற்காகவும், இறைவனுக்குப் புத்தாடைகள் அணிவிப்பதற்காகவும், அமுதுகள் செய்து படைப்பதற்காகவும் நிவந்தங்கள் அளித்தான் அரசன். உய்ய நின்றாடுவனான குருகுலத்தரையன், சீவல்லவனான மாதவராஜன், விரத முடிச்சானான பல்லவராஜன் என்னும் அரசு அதிகாரிகளும் இக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றனர். முள்ளிநாட்டு இராஜ ராஜச்சதுர்வேதி மங்கலத்துப் பிடாகை கயத்தான் குறுச்சி, திருமல்லி நாட்டு தடங்கண்ணிச் சிற்றூர், மிழலைக் கூற்றத்து மும்முடிச் சோழநல்லூர், செவ்விருக்கை நாட்டு சக்கரபாணி நல்லூர் போன்ற ஊர்களும் கல்வெட்டில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

கல்வெட்டுக்கள் திருநெல்வேலி இறைவனைத் திருநெல்வேலி உடையார், திருநெல்வேலி உடைய நாயனார் என்றும் இறைவியைத் "திருக்காமக் கோட்டம் உடைய நாச்சியார்" என்றும் அழைக்கின்றன. 'கீழ் வேம்ப நாட்டுத் திருநெல்வேலி' என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுவதால் கீழ்வேம்பநாடு என்னும் பிரிவைச் சேர்ந்தது திருநெல்வேலி என்று அறியலாம்.

கல்வெட்டுக்கள் கூறும் செய்திகள் வரலாற்றை அறிவதற்கும், நல்லாட்சியின் சிறப்புக்களை உணர்வதற்கும், திருப்பணிகளை அறிவதற்கும் துணை நிற்கின்றன.

# திருவெம்பாவை பாடல் எண் 9

பேராசிரியர் சுப.அண்ணாமலை

## முன்னைப்பழம் பொருளே!

பாவை நோன்பு மேற்கொண்ட கன்னிப் பெண்கள் எல்லாரும் கூடி விட்டார்கள். மார்கழி நீராட மகளிர் கூட்டம் புறப்படுகின்றது. ஊர்க்கதைகளைப் பேசாமல், உலகநாதனின் புகழையும், அவனிடம் தாங்கள் வேண்டும் வரத்தையும் பாடலாகப் பாடிய வண்ணம் அவர்கள் பொய்கையை நோக்கி நடக்கின்றனர்.

அவர்களுள் இறைவனைக் காதலனாக வரித்தவரும் உண்டு; வரிக்காத வரும் உண்டு. ஆதலால், பாவை நோன்பு இயற்று வதில் தலைமையாக உள்ள பெண்கள், அந்த நோன்பின் பொதுவான மரபின்படி, தங்களுக்கு ஏற்ற நல்ல கணவன்மாரைத் தரும்படி இறைவனை வேண்டிப் பாடுகின்றனர். சிவனடியார்கள் தாம் தம் கருத்திற்கு ஏற்ற கணவராவர் என்று முடிவு செய்த அவர்கள், அத்தகையவரையே தந்தருளும்படி வேண்டுகின்றனர்.

அவர்கள் பாடும் இப்பாடல், சரணாகதியின் சிறப்பையும், அடியாரின் பெருமையையும், அவர்க்குப் பணி செய்து வாழ்வதன் பயனையும் உணர்த்துகின்றது.

'பழமையான பொருளுக்கும் பழமையானவனே, இனி ஒரு புதுப்பொருள் தோன்றுமானால், அதைவிடவும் புதுமையானவனே'

"முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பேற்றியனே"

என்று சிவபிரானை அழைக்கின்றனர். முன்னைப் பழமை என்பதால், வரலாற்றுக் காலத்திற்கும் முந்திய பழைய வரலாறும் (Pre - historic age) புதுமைக்கும் புதுமை என்பதால் விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்படும் அறிவியல் புதுமையும் நினைவிற்கு வருகின்றன.

இறந்த காலம் எல்லாம் பழைமை; இனி வரும் காலம்

எல்லாம் புதுமை. பழமையின் தன்மையை உலகம் அறியாது. இறைவன் அப்பழைமைக்கும் பழைமையானவன். புதுமையின் தன்மையையும் உலகம் அறியாது. எத்தனைதான் புதுப்பொருள்கள் விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்பட்டாலும், அவற்றை விடப் புதிய தன்மை இறைவனிடம் இனிவரும் காலந்தோறும் காணப்படும்.

இறந்தகாலப் பொருள் என்று அவனைக் கருதுவதற்கு இல்லை. அவனில்லாமல் இப்பொழுதுகூட ஓர் அணுவும் அசையாது. அவனைப் புதுமையான பொருள் என்றும் கொள்ள முடியாது. அவனுக்குப் பழைய வரலாறுகள் எத்தனையோ உண்டு.

வரலாற்றுக் காலத்திற்கு முந்திய காட்சிப் பொருள், கருத்துப் பொருள் - இரண்டின் பழைமைக்கும் கணக்கு இல்லை. ஏன்? நாம் அவற்றை அறிய முடியாமையால் இறைவன் அந்த முன்னைப் பழம் பொருளை விடவும் பழைமையானவன் என்றால், அவனை அறிய முடியாது என்பதுதானே கருத்து? தெய்வங்கள் உலகைப் படைத்தன என்பர். அந்தத் தெய்வங்களையும் படைத்த தெய்வம் அவன். பழைமை என்பது கால தத்துவத்திற்கு உட்பட்டது. புதுமையும் அப்படியே. இறைவனோ காலத்தைக் கடந்தவன். எதையும் பழையது ஆக்கி, கதையாய், கனவாய்ச் செய்துவிட வல்ல காலம், இதுவரை கண்டறியாத அதிசயங்களைக் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தும் காலம், இறைவனை ஒன்றும் செய்யமுடியாது. காலனை வென்றவன் அவன்.

பழைமை என்றாலே, அதில் வளர்ச்சி இல்லை என்பது தெளிவு. இறைவனைப் பற்றிய அறிவு, அப்படி வளர்ச்சி இல்லாமல் தேங்கிப் போன ஒன்று அல்ல. உலகச் சமயங்கள் அவனைப் பற்றி இதுவரை அறிந்தவை ஏராளம். ஆயினும் அவனிடம் அன்பு கொள்ளும் அடியவர்கள் புதுப்புது அனுபவங்கள் பெற்று வருகின்றனர். அதனால் புதுப்புது உண்மைகளை அறிகின்றனர். அவற்றுள் சமயங்கள் ஏற்றுக் கொண்டவையும் உண்டு. ஏற்றுக் கொள்ளாதவையும் உண்டு. அவனை முற்ற முடிய அறிந்து கொள்வது என்பது யாராலும், எக்காலத்திலும் ஆகாத செயல். இதை எல்லாம் எண்ணி,

இறைவனைப் பழமை, புதுமை என்ற காலக் கணக்கிற்கு அப்பால் வைத்து உணர்ந்த பெண்கள், பாட்டைத் தொடர்கிறார்கள்.

"உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீரடி யோம்" இறைவனே, உன்னை நாங்கள் அறியப் புறப்படவில்லை. நீயே வலிய வந்து எங்களை ஆட்கொண்டாய். "வன்னெஞ்சக் கள்வர், மனவலியர் என்னாதே, கல் நெஞ்சு உருக்கிக் கருணையினால் ஆண்டு கொண்டாய்." அதனால் உன்னை எங்கள் உடையவனாக- பிரானாக - பெற்றோம். உனக்கு அடிமை செய்தே-உன் பணி செய்தே - உன் திருவுள்ளத்திற்கு உவப்பு உண்டாகும்படி வாழ்வோம். அதற்கு நீ ஒரு வரம் தர வேண்டும். உன் அடியாரைப் பணிந்து, அவருக்கு உரிமையாகி, அவர்களுக்கு மனைவியரும் ஆகின்ற வரத்தைத் தரவேண்டும். அவர்கள் உன் அருளைப் பெறுவதில் உயர்ந்து, எங்களுக்கு இருக்கின்ற பணியை - உன் அருளால் குறிக்கப்பெறும் பணியை - உலகம் வாழும் வண்ணம் நீ எம் கணவராவார் கருத்தில் நின்று உணர்த்தும் பணியைச் செய்வோம். எந்தப் பயனும் பாராமல் செய்வோம். காலதத்துவம் கடந்து, அறிய முடியாதவனாய் உள்ள உன்னை, அந்தப் பணியிலேயே தரிசிப்போம்.

"உன் அடியார் தாள் பணிவோம் ஆங்கு அவர்க்கே
பாங்காவோம்

அன்னவரே எம் கணவராவார், அவர் உகந்து சொன்ன
பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்"

அறிவால் அறிய முடியாத உன்னை, 'நீயே சரண் எமக்கு' என்று கருதும் தொழும்பாக - உன்னைக் காண்பதைத் தவிர வேறு பயனைக் கருதாத தொழும்பாக - பணி செய்வதால் சிறிது புரிந்துகொள்ள விரும்புகிறோம். எங்கள் ஐயா, இந்த வரம் தருவாயா?

"இன்ன வகையே, எமக்கு, எம் கோன், நல் குதியேல்

என்ன குறையும் இலோம் ஏலோரெம்பாவாய்"

எங்கள் ஆசை இது. இந்தப் பாக்கியத்தைத் தர உன் திருவுள்ளம் இசைந்தால், எங்களுக்கு என்ன குறை?

# க. வெள்ளைவாரணனாரின் ஆய்தக்கொள்கை

*முனைவர் தி.நெல்லையப்பன்*

க. வெள்ளைவாரணனார் (1917 - 1988) நவீன காலத்தில் தமிழ் இலக்கணம், பக்தி இலக்கியங்களில் தனிச்சிறப்பு பெற்றவர். அண்ணாமலை, மதுரை, தமிழ்ப் பல்கலைக்கழகங்களில் பணியாற்றிய குறிப்பிடத்தக்க பேராசிரியர்களில் ஒருவர். 1985 ஆம் ஆண்டு தமிழக அரசின் கலைமாமணி விருதையும் பெற்றவர். இலக்கண விதிகளுக்கு உரையாசிரியர்களின் விளக்கங்களைக் கொண்டும் தமது புதிய விளக்கச் சிந்தனைகளின் வழியும் இலக்கணத் தெளிவு அளிப்பதில் அவருக்கு நிகர் அவர்தான். அவ்வகையில் ஆய்தம் பற்றிய சிந்தனை ஈண்டு ஆய்வுப் பொருளாக்கப்பட்டிருக்கின்றது.

தொல்காப்பியர் 'ஆய்தம்' என்ற எழுத்தைச் சார்பெழுத்தில் ஒன்றாக வைத்துக் கூறியுள்ளார்.[1]

ஆய்தம் என்பதை முதல் எழுத்தோடு ஒரு தின்மை உடையது என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் உரைத்துள்ளனர்;[2] இவர்களின் கருத்துப்படி முப்பாற்புள்ளி என்ற தொடர் ஆய்தத்தின் வரிவடிவை விளக்க வந்ததாகும். சார்பெழுத்தில் ஒன்றுக்கு மட்டும் வரிவடித்தை விளக்குதல் சிறப்பு இன்மையால் இவ்வுரை பொருந்தாது என்பர்.[3]

*முப்பாற் புள்ளி என்ற தொடரைச் சார்பெழுத்துக்கள் மூன்றற்கும் பொதுப்பெயராகக் கொண்டு, அங்ஙனம் சார்ந்து வரும் எனப்பட்டவைதாம் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூவகையான புள்ளிபெறும் எழுத்துக்கள் எனவும் அவை முற்கூறிய முப்பதெழுத்துக்களோடு ஒரு தன்மையவாம் எனவும் பொருள் உரைப்பர் பேராசிரியர்.*[4]

"தொல்காப்பியர் ஆய்தத்தைத் தனி எழுத்தாக எழுதும் வழக்கை மறுத்துச் சார்பெழுத்தாகவே கொள்கிறார் என்பதால் அவர் காலத்திலேயே ஆய்தத்தைத் தனி எழுத்தாக எழுதும் முறை இருந்திருக்க வேண்டும்" எனத் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் குறிப்பிட்டுள்ளார்.[5]

"ஆய்தத்தைத் தனி எழுத்தாகக் கருதிய தொல்காப்பியம் மற்ற எழுத்துக்கள் ஆய்தமாக மாறும் புணர்ச்சி மாற்றங்களைப் பற்றிப் பேசுகின்றன" என்பார் கூற்றும் ஆய்தம் பற்றிய சிக்கலை எடுத்துரைக்கின்றது.

சொற்கள் அனைத்திற்கும் காரணம் காண இயலாது என்பர் தொல்காப்பியர். 'ஒய்தல், ஆய்தல், நிகழ்த்தல், சா அய் ஆவயின். நான்கும் உள்ளதன் நுணுக்கம்' என்றாராகலின் இச்சொல் ஆய்தல் என்ற உரிச்சொல் அடியாகப் பிறந்து ஆய்தம் என்றாகி நுணுகிய ஓசையுடைய எழுத்தென்ற பொருளில் வழங்கியிருத்தல் வேண்டும் என வெள்ளைவாரணனார் குறிப்பிட்டுள்ளார்.

"தொல்காப்பியர் ஆய்தத்தைக் குறிப்பிடுமிடத்து ஆய்தப்புள்ளி என்று குறிப்பிடுகிறார். ஆய்த ஒலி என்று இதைக் குறிப்பிட்டாரிலர்"[8] எனவும் ஆய்தம் என்பது ஆய் என்னும் தூய தமிழ்ச்சொல்லின் அடியாகப் பிறந்து நுண்மையை உணர்த்துவது இங்கு நுண்ணிய எழுத்தொலி ஒன்றைக் குறிப்பிடும் புள்ளியாக அஃது இயங்கியது. தனக்கென ஒரு வடிவம் அற்று எந்த எழுத்தைச் சார்ந்து வருகின்றதோ அந்த எழுத்தின் மேல் இடப்பெறும் ஒரு புள்ளியாக ஆய்தப் புள்ளி எனப் பெயர் பெற்றது எனவும் கு.கோ.தண்டபாணிப்பிள்ளை விளக்கம் தந்துள்ளமை வெள்ளை வாரணனார் கருத்துக்கு அரண் சேர்ப்பதாக உள்ளது.[9]

ஆய்தம் புள்ளி வடிவிற்றென்றும் சிலர் அதனை நடுவே வளைந்த கோடிட்டு வழங்கினார்கள் என்றும் ஆய்தம் ஏனைய ஒற்றுக்கள் போல உயிரேறாது நிற்பது என்றும் ஆய்தம் பற்றிய பல வகையான கருத்துக்களை வெள்ளைவாரணனார் குறிப்பிட்டுள்ளார்.[10]

குற்றியலிகரம் இகர உயிரின் சார்பானது; குற்றியலுகரம் உகர உயிரின் சார்பானது; ஆய்தம் அகர உரியின் சார்பானது. அகர உயிர் ஏனைய இகர உகரக் கோணங்களாக நிற்றலைப் போலவே அகரத்தின் சார்பாகிய இவ்வாய்த எழுத்தும் குற்றியலிகர குற்றியலுகரக் கோணங்களாகி ஒலிக்கும் எனவும்

இவ்வுண்மையை உணர்ந்த தொல்காப்பியர் அஃது சார்பாகிய ஆய்தத்தை முன் வையாமல் இறுதியில் வைத்து வரிசைப்படுத்தியுள்ளார். இதனால்தான் இதனை முப்பாற்புள்ளி என்று பெயர் கூறி வரிவடிவிலும் முக்கோணமாக அமைத்துள்ளனர் என்று ச. பாலசுந்தரம் விளக்குவது எடுத்துக்காட்டத்தக்கது; இயைத்துப் பார்க்கத்தக்கது.

வெள்ளை வாரணனார் நடு வாங்கியிட்டெழுதுப என்ற தற்கேற்ப எட்டாம் நூற்றாண்டில் பல்லவமல்லன் காலத்தில் அமைந்த காசக்குடிப் பட்டயத்துள் 'வெஃக' என்ற ஆய்தம் *'வெப்கா' என நடு வாங்கியிட்டு வரையப்பட்டுள்ளதை* எடுத்துக் காட்டியுள்ளார்.[12]

வடமொழியில் ஒரு வகை ஒலியை 'ஆஸ்ரத்' என வழங்குகின்றனர். இவ்வாஸ்ரதம் என்னும் எழுத்து தமிழில் *ஆய்தம் என வந்தது என்னும்* கொள்கையை வெள்ளைவாரணனார் மறுத்துள்ளார். தமிழில் சார்பெழுத்தாகி ஓர் ஒலியின் பெயராகிய ஆய்தம் ஆஸ்ரதம் என்பதன் திரிபென்று கொள்வதற்கு எவ்வகை இயைபும் இல்லை. வடமொழியில் ஆஸ்ரதம் என்பதன் உருவமும் பொருளும் எழுத்தியல்பும் வேறு. தமிழில் ஆய்தம் என்ற சொல்லுருவும் பொருளும் எழுத்தொலியும் வேறு.

வேறுபட்டவையாகக் காணப்படுகின்ற ஆஸ்ரதம் ஆய்தம் என்பனவற்றை ஒன்று என்பது எவ்வாற்றானும் பொருந்தாது என்பதே வெள்ளைவாரணனார் கருத்து.[13]

சதுரம், வட்டம், ஆய்தம், முக்கோணம், சிலை என்றிவற்றை மயிலைநாதர் குறிப்பிட்டுள்ளதையும் இவற்றில் ஆய்தம் நீண்ட வடிவினைக் குறித்திருத்தலையும் வெள்ளை வாரணனார் சுட்டிச் சென்றுள்ளார்.[14]

பல்லவ சாசனத்துக் கண்ட இவ்வாய்த வடிவைப் போலவே வடமொழி விசர்க்கத்துக்கு மேலும் கீழமைந்த இரட்டைப்புள்ளி ஃ என இடைக்கோடு வளைவின்றியும் பின் பாண்டிய சாசனமொன்றில் காணப்படுவது ஈண்டு ஒப்பிடத்தக்கதாகும். எனவே ஆய்தம் மிகப் பிற்காலத்தேதான் எழுதப்பெற்றது எனக்

கூறிய மு.இராகவையங்கார் கருத்தையும் வெள்ளைவாரணனார் மேற்கோள் காட்டி விளக்கம் தந்துள்ளமையைக் காணலாம்.

இதிலிருந்து ஆய்தம் என்னும் பெயர் 'ஆஸ்ரதம்' என்பதன் திரிபன்று; வடமொழி விசர்க்கத்துக்கும் இதற்கும் வடிவவேறுபாடு மிகுதியும் உள்ளது. ஆய்தம் என்ற எழுத்தொலி தமிழுக்கேயுரிய சிறப்பொலி. ஆய்தத்தை 'உற' எழுத்தொலியாகத் தவறாகக் கருதுபவர் உளர். எனினும் அது மெய்யீறாய் மொழி முதனின்று உயிரேறி நிற்கும் இயல்பறிந்து மயக்கம் நீக்கப்படவேண்டும் என்று வெள்ளைவாரணனார் கருத்துரைத்துள்ளார்.[16]

மேலும் "ஆய்தம் என்பது தனி ஒலியைக் குறிக்காது. இது பொது ஒலித்தன்மையுடையது" என்பர் செ.வை.சண்முகம்.[17]

அடுத்து ஃ என்ற எழுத்து சார்பெழுத்துக்களில் ஒன்று. இது முற்றாய்தம் குற்றாய்தம் என இருவகைப்படும் என்பர் டாக்டர் பொற்கோ.[18]

ஆனால் தொல்காப்பியத்தின்படி ஆய்தம் என்றால் நலிவுடையது என்பது பொருள் எனவும் நலிவாவது இரண்டிற்கு இடையே சுருங்குதல், இடுக்கப்படுதல் நசுக்கப்படுதல் எனவும் கொண்டு,

"குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரோடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே" [19]

என்ற நூற்பா குற்றெழுத்துக்கும் உயிர்மெய் வல்லெழுத்துக் கும் இடையில் மாட்டிக்கொண்டு நசுங்குகின்றது. இதற்குப் பொருண்மை இல்லாவிட்டாலும் இது ஒருவகையில் வன்றொடர், மென்றொடர், இடைத் தொடர்க்குற்றியலுகரங்களிலும் வேறாக ஆய்தத் தொடர்மொழிக் குற்றியலுகரம் என ஒன்றியிருப்பதே சான்று என்பர் வ.சுப.மாணிக்கம்.[20] ஆய்தம் புணர்மொழிக்கண் வருதலை நன்னூலார் ஆய்தக் குறுக்கம் என்பர். கல்+தீது=கஃறீது எனவும் முள்+தீது=முஃடீது எனவும் வரும் லகர ளகரங்களின் இயல்பினால் ஆய்தம் வரும் என்றும் ஆய்தம் தன் மாத்திரையில் குறுகும் எனவும் கண்ட நன்னூலார்,

லளவீற்று இயைபினாம் ஆய்தம் அஃகும்[21] என

விதியமைத்துள்ளதையும் குறிப்பிட்டுள்ளார். இவருக்கு முற்பட்ட தொல்காப்பியரோ, பிற்பட்ட இலக்கண விளக்க நூலாரோ ஆய்தக் குறுக்கம் என ஒன்று கொள்ளவில்லை. ஆதலினால் நன்னூலார் கருத்து பொருத்தமில்லை என வேங்கடராசுலு ரெட்டியார் கூறியுள்ளதை, கு.சுந்தரமூர்த்தி எடுத்து மொழிவதனால் அறியவியலும்.[22]

இன்னும் பார்க்கப்போனால் அக்கடிய என்பது கடைக் குறையாய் அஃகடிய எனவாயிற்று எனல் வேண்டும். அல்லாக்கால் ஆண்டு ஆய்தம் தோன்றக்காரணம் இன்றாம்[23] எனக் கூறுவார் கருத்தும் சிந்தித்தற்குரியது.

எவ்வாறாயினும் ஆய்தம் உயிர்த்தன்மையும் ஒற்றுத் தன்மையும் எய்தி யாப்பினுள் அலகு பெற்றும் பெறாதும் நிற்கும். அலகு பெறாது இருந்தால் சீரிலும் தளையிலும் நெகிழ்ச்சிக்கு இடம் தரும். ஏனைய பாக்களினும் நெகிழ்ச்சிக்குச் சிறிதும் இடம் தராத வெண்பாவில்தான் இதனைச் சிறப்பாகக்காணக்கூடும் என் அ.மா.பரிமணம் குறித்துச் சென்றுள்ளது[24] போற்றுதற்குரியது. ஆய்தம் எவ்வாறு உரைக்கப்பட்டாலும் புள்ளிபெறும் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை என்பது ஆய்தம் பற்றிய வெள்ளை வாரணனாரின் கொள்கையாகும். எனவே ஆய்தம் புள்ளியாக நிற்பினும் ஏனைய ஒற்றுக்கள் போல் உயிர் ஏற இடந்தராது என்பதைத் தக்க ஆதாரங்களுடன் நிறுவிய பெருமை வெள்ளை வாரணனாருக்கே உண்டு.

## குறிப்புகளின் விபரம்

1. கு.சுந்தரமூர்த்தி, (பதி) தொல். எழுந்து. இளம்பூரணர் உரை, நூற். 1 ப.23,
2. மேலது, நூற் ந. ப.32
3. மேலது, ப.33
4. மேலது, ப.33
5. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், (க.ஆ) ஃ கலைக்களஞ்சியம், தொகுதி இரண்டு (சென்னை, 1955) ப.759.
6. க.பாலசுப்பிரமணியன், "தொல்காப்பியரின் ஆய்தக் கொள்கை" இலக்கண ஆய்வுக் கட்டுரைகள், தொகுதி ஒன்று,

(அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1974), ப.384.

7. க.வெள்ளை வாரணனார், தொல்காப்பியம் - நன்னூல் - எழுத்துகாரம் (ப.37)
8. இராவசாகோப் கு. கோதண்டபாணிப்பிள்ளை, ஆய்தப்புள்ளி, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 44 (1969 - 70)
9. மேலது, ப.136
10. க.வெள்ளைவாரணன், தொல்.நன்.எழுத்துக்களும் ப.26
11. ச. பாலசுந்தரம், "ஆய்தம் என்னும் முப்பாற்புள்ளி" தமிழ்ப் பொழில் (கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு, 1980) பக் 79-80)
12. க.வெள்ளை வாரணன், தொல்.நன்.எழுத்து ப.26.
13. மேலது, ப.26
14. மேலது, ப.27
15. மேலது, ப.27
16. மேலது, ப.31
17. செ.வை.சண்முகம், (பதி) சுவாமிநாதம், முதற்பதிப்பு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (1975), ப.23
18. டாக்டர். பொற்கோ, இலக்கணக் கலைக் களஞ்சியம், ப.9
19. கு.சுந்தரமூர்த்தி (பதி) தொல். எழுத்து. இளம்பூரணர் உரை நூற்.38, ப.69
20. வ.சுப. மாணிக்கம், புதிய ஃ, தொல்காப்பியக் கடல், ப.101.
21. முகவை. இராமானுசக் கவிராயர் (பதி) நன்னூல் மூலமும் விருத்தியுரையும், முதற்பதிப்பு (மதுரை.1940) நூற்.96, ப.-70.
22. கு.சுந்தரமூர்த்தி, (பதி) தொல். எழுத்து இளம்பூரணர் உரை, ப.70
23. கார்த்திகேய முதலியார் 'மாகஷல்' மொழிநூல் (இலக்கணவியல்) வேப்பேரி, (சென்னை 1913) ப.17.
24. அ.மா.பரிமணம், 'ஆய்த நிலையும் யாப்பில் அதன் நிலையும்' ஆய்வுக்கோவை, தொகுதி இரண்டு, இ.ப.த.மன்றம், ஒன்பதாம் கருத்தரங்கு 1977, 0.22)

# வேளாள புராணம்: ஓர் அறிமுகம்

*முனைவர் ம.ரா.போ.குருசாமி*

*முன் இதழ் தொடர்ச்சி*

சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் குண்டையூர்க்கிழார் என்ற வேளாளர் நெல் வழங்கி உதவினார். இந்தச் செய்தியை நினைவூட்டிச் சுந்தரருக்கு நம் கவிஞர் வணக்கம் செலுத்துகிறார். "வேளாளராகிய நமக்குத் தரம் (சிறப்பு) கொடை வழங்குவதே என உலகம் சொல்லும்படியாகக் குண்டையூரிலே பிறந்த ஒரு வேளாளர் நெல் உதவினார். சிவனடியார்க்கென அவர் வழங்கிய நெல் மந்தர மலைபோலக் குவிந்திருந்தது. மலைபோலக் குவிந்திருந்த நெல்லையெல்லாம் சிவபிரானின் பூதகணங்களைக் கொண்டு சுந்தரர் பெற்றுக் கொண்டார் அத்தகைய சுந்தரரின் திருவடி மலரைத் தொழுது வாழ்த்துவோம்" - இது பாடலின் திரண்ட பொருள்; இனி பாடலைக் காண்போம்.

நம் தரம் கொடை என நவிலக் குண்டையூர்
வந்து அரன் அடியர்க்கே வழங்கும் ஓர் கிழான்
மந்தரம் நிகர்தரு வரியைக் கொள் குறள்
சுந்தரன் அடி மலர் தொழுது வாழ்த்துவோம் (பக் - 15)

'மந்தரம் நிகர்தரு வரியைக் கொள்குறள்' என்ற மூன்றாம் அடிக்கு மந்தர மலையை ஒத்த நெல்லைக் கொண்டு சென்ற பூதகணம் என்பது நேர் பொருள். இந்தப் பொருளைத் தரும் அடியின் வாசகத்தில் 'மந்தர மலை போன்ற கருத்து விரிவைக் கொண்ட குறள் வரி' என்ற கருத்தும் தொனிப் பொருளாக விளங்குகிறது. 'தொனிப் பொருள் கவிதைக்கு உயிர்' என்ற திறனாய்வாளர் கருத்து இங்கே நினைவில் கொள்ளத்தக்கது

## உரைவளம்

இனி, உரையாசிரியரின் திறம் பற்றிச் சிறிது கூறுவோம். ஏற்கனவே தெரிவித்த கருத்துகளில் உரையாசிரியரின் புலமை ஆற்றல் புலப்படுத்தப்பட்டுள்ளது. திரிபு போன்ற சொல்லணிகளுக்கு உரை வகுப்பது மிகவும் கடினம்; கடினமான

அப்பணியை மிக எளிதாகப் புலவர் பழனிச்சாமி அவர்கள் நிறைவேற்றியிருக்கிறார். இங்கே ஓர் இடம் மட்டும் எடுத்துக்காட்ட விழைகிறேன். நூற்பாயிரம் 15 ஆம் பாடலில் (பக் . 25) செகதலத்தில் இறந்தபின்னும் வாய்க்கு உதவும் வேளாளர் பத்து இயல்பும் என்று கவிராயர் பாடுகிறார். பத்து இயல்புகள் யாவை என்று கவிஞர் கூறவில்லை. அவற்றை உரையாசிரியர்தான் பட்டியலிட்டுக் காட்டுகிறார்.

திணை மயக்கம் பாடுவது கவிராயருக்குக் கடும் சோதனை தரும்; அதற்கு விளக்கமாக உரை எழுதுவது உரையாசிரியரின் புலமைக்கு மிகவும் கடிய சோதனையாகும். இந்தக் கடிய சோதனையில் புலவர் பழனிச்சாமி மிகவும் எளிதாகச் சாதனை புரிந்திருக்கிறார்.

எடுத்துக்காட்டுகள் பல தந்து விரிப்பதற்கு உரியதையெல்லாம் ஒரே வரியில் சொல்லிவிடலாம். கந்தசாமிக் கவிராயரின் திறமைகளையெல்லாம் மனத்திலே வாங்கி, நமக்குத் தெளிவாக வழங்கியிருக்கிறார், புலவர் பழனிச்சாமி அவர்கள். கவிராயருக்கு நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறோமோ அதே அளவு உரையாசிரியராகிய புலவர் இல.பழனிச்சாமி அவர்களுக்கும் கடமைப்பட்டிருக்கிறோம்.

## பூவிற்கும் புல்லிதழ்

பூவிற்கும் புல்லிதழ் உண்டு என்பர். அதுபோல அற்புதப் பதிப்பாக வெளிவந்துள்ள வேளாள புராண வெளியீட்டிலும் ஒரு குறையை எடுத்துக்காட்ட வேண்டியுள்ளது.இதுபோன்ற நூல்களில் செய்யுள் முதற்குறிப்பு அகராதி கட்டாயம் இடம் பெற வேண்டும். முனைவர் அமுதன் அறிமுக உரையில் 'சாதியில் மேல் எனச் சாற்றும் வேதியர்' எனத் தொடங்கும் ஒரு பாடலை எடுத்துக்காட்டுகிறார். அந்தப் பாடலைச் சட்டென்று கண்டுபிடிக்கமுடியாமல் நூல் முழுவதையும் புரட்டிப் பார்த்து 196ஆம் பக்கத்தில் இருக்கிறது எனக் கண்டேன். செய்யுள் முதற்குறிப்பகராதி இருந்தால் சில கணங்களில் இருப்பிடத்தைக் கண்டுவிட முடியும்.

**இன்னொரு குறிப்பு:** டாக்டர் சாமிநாத ஐயரவர்கள் ஒரு நூலைப் பதிப்பிக்கத் தொடங்கும்போது முதலில் அரும்பத அகராதியைத்தான் தயாரிப்பாராம். அந்த அகராதி இருந்தால், இன்னின்ன சொல் இந்த நூலில் இன்னின்ன பொருளில் வழங்கப்படுகிறது என்று வரையறுத்துக் கொள்ள உதவியாக இருக்கும் இந்தச் செய்தியை வாகீசகலாநிதி கி.வா.ஜ அவர்கள் தெரிவித்தார்கள். இந்த நூலுக்கும் அப்படி ஓர் அரும்பத அகராதி இருந்தால் மிகவும் உதவியாக இருக்கும். பங்கணணல், நாலடியார், தோலடியார், மறைதந்த மீன் போன்ற சொல்லாட்சிகள் கந்தசாமிக் கவிராயரின் தனிச்சிறப்பு. இதுபோன்ற பல நல்ல குறிப்புகளை அரும்பத அகராதியால் உணரமுடியும். ஒரு செய்தி: டாக்டர் ஐயரவர்களின் அரும்பத அகராதிகளே மிகப் பலர் பி.எச்.டி பட்டம் பெற உதவியிருக்கின்றன: இந்த ரகசியத்தை வெளியே சொல்லிவிடாதீர்கள்.

நூலின் இறுதிப் படலத்தில் புகழ் பெற்ற பெருமக்கள் பலரைக் குறிப்பிட்டு, ‘இவர்களெல்லாம் வேளாளர்கள்’ என்று கவிராயர் பாராட்டியிருக்கிறார். மிக மிகச் சிறப்பான ஒருவர் இதிலே விடுபட்டிருக்கிறார். வைணவ சமயத்தின் தலைநாயகராகிய நம்மாழ்வார்பெயர் இல்லாதது இந்தப் பட்டியலுக்கு ஒரு குறை என்றே தோன்றுகிறது.

## முடிவாக

முடிவாக: இருபதாம் நூற்றாண்டில் எழுந்தது இந்தக் காவியம்; இருபத்தொராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் - குடியரசு நன்னாளில் நம் அருட்செல்வர் மகாலிங்கம் அவர்களின் வள்ளன்மையால் இந்த நூல் உலா வரத் தொடங்கியுள்ளது. இந்த இரண்டு நூற்றாண்டுக்கு மட்டுமல்லாமல் புத்தாயிரமாண்டுத் தொடக்கத்தில் வெளிவந்த இந்த நூலின் செய்திகள் எத்தனை ஆயிரமாவது ஆண்டுகளுக்கும் பொருத்தமானவை என்பதை உணர்ந்தால், தமிழ்ச் சமுதாயம் நம் அருட்செல்வர் அவர்களுக்கு எவ்வளவு கடமைப்பட்டுள்ளது என்பது தெளிவாகும்.

**வாழ்க வையகம்!**

# திருக்குறள் உணர்த்தும் சித்தாந்த சமயம்

*பேரறிஞர் நா. பாலுசாமி*

## I பொதுநூல்

திருவள்ளுவப் பெருந்தகை அருளிய திருக்குறள் தெய்வமணம் கமழும் தெள்ளமுது. மனித வாழ்க்கையின் பல்வேறு துறைகளையும் விளக்கும் வழிகாட்டி. பிறவிப் பயனாம் இறைவனை அடைவதற்குரிய நெறியை உணர்த்தும் மெய்ந்நூல் உலகியல் நூல் என்பர் சிலர்; பொருள் நூல் என்பர் சிலர்; வாழ்க்கை விளக்கம் என்பர் சிலர்; புரட்சி நூல் என்பர் ஒருசிலர்; சைவத்தின் பிரமாண நூல் என்பர் சிலர்; வைணவ வேதம் என்பர் சிலர்; சமண நூல் என்பர் சிலர்; பவுத்த நூல் என்பர் சிலர்; விவிலியத்தில் வரும் மலைப்பிரசங்கத்தின் எதிரொலி என்பர் கிறித்தவர்; நபிகளின் நல்லொழுக்கக் கூறுகள் உளதென்பர் இசுலாமியர்; இவை எல்லாமும் அல்ல என்று வாதிப்பர் சிலர். இவ்வெவ்வேறு கூற்றுக்களை நோக்கின், திருக்குறள் எல்லாப் பிரிவு மக்களும் விரும்பும் ஒரு பொதுநூல் என்பது விளங்கும். நிறைமொழி மாந்தருள் மனிதத் தெய்வமாகத் தோன்றிய திருவள்ளுவர்அருளிய மறைமொழியே திருக்குறள்.

இத்தெய்வத் திருக்குறள் உணர்த்தும் நெறிதான் யாது? சமயம் தான் யாது? சமயதத்துவங்கள் யாவை? அன்றி இது வறிதே உலகியல் நூலா? இக்கேள்விகள் எழுகின்றன. விடை காண்பது நன்றாம். அவ்வாறெனின் முதலில் சமயம் என்பதன் உண்மை விளக்கம் காண்டல்வேண்டும்.

## II எது சமயம்

"இன்பப் பொருளாம் இறைவனை அடைதற்கு உயிர்கள் கடைப்பிடித்து ஒழுகும் ஓர் அறவழியே சமயம் என்று கூறலாம். சமயம் என்பதொன்று இல்லையேல் உலகில் அறம் ஏது? அன்பு ஏது? ஆன்ம உணர்வு ஏது? மக்களை விலங்கினின்றும் பிரித்து, அவர்களைச் செந்நெறியில் நிறுத்தி, ஆண்டுவருவது சமயம் எனில், அதன் பெற்றியை என்னென்று கூறுவது?" என்று கூறுகிறார் திரு.வி.க

**"எல்லாவற்றையும் இறைவனாகக் காண்க; தொண்டு செய்க; ஒரு நாய் பட்டினி கிடந்தாலும், அதன் பட்டினியைத் துடைப்பதே என் மதம்" என்கிறார் சுவாமி விவேகாநந்தர்**

"கடவுள் என்பது வினைச் சொல்; பெயர்ச் சொல் அன்று" (God is a verb; not a noun) என்கிறார் ஆஸ்கர் ஒயில்டு என்னும் மேனாட்டு அறிஞர்.

"கடவுள் கருத்துப் பொருள் மட்டும் அல்லர்; காட்சிப் பொருளும் ஆவர்" (God is not an abstraction; but an actuallity) என்கிறார் மற்றொரு மேனாட்டு மேதை.

உலகில் ஒரே ஒரு சாதிதான் உண்டு; அதுதான் மனிதச் சாதி ஒரே ஒரு சமயம் தான் உண்டு; அதுதான் அன்பு என்னும் சமயம். ஒரே ஒரு மொழிதான் உண்டு; அதுதான் இதயத்தின் மொழி.

( " There is only one caste, the Caste of humanity; There is only one religion, the religion of Love; There is only one language, the language of heart) என்கிறார் ஒரு பெரும் சிந்தனையாளர்.

"நம்மால் போற்றி வணங்கத் தக்க, அனைத்தையும் ஆளத்தக்க ஒரு பேராற்றல் உண்டு; அவ்வாற்றலே கடவுள் அல்லது கடவுளர் என்பதனை உணர்த்தும் ஒரு சாதனமே சமயம் ஆகும்" என்கிறது ஆக்ஸ்போர்டு அகராதி. (Religion is human recognition of a super human controlling power and especially of a personal god or gods entitled to obediance and worship")

"வழிபாடு, வாழ்த்து, தியானம், தலயாத்திரை, மலர்ப் பூசனை, சடங்குகள், நியமங்கள் - இவை எல்லாம் நன்றே; ஆயின், இவை பக்தியின் ஒரு பக்கமே; மறுபக்கம் ஒன்று உண்டு; அதுவே ஒளிமிக்க பக்கம். அஃதாவது, ஏழைகள், தாழ்த்தப்பட்டோர், வசதிகள் மறுக்கப்பட்டோர் முதலியோர்க்குத் தொண்டு செய்வதுதான் உண்மையான பக்தி" (Worship, prayer, meditation, pilgrimage, floral tributes, and observance of religious rites and rituals - all - right; but his is one side true Bhakthi the other side, the brightest side is service to the poor, the down - trodden, the under privileged etc.,") என்கிறார் காந்தியடிகள்.

மேலே காட்டிய உண்மைகளை நோக்கின் சித்தாந்த சைவம் அவற்றிற்கு ஓர் எடுத்துக்காட்டு எனலாம். எச்சமயத்தினரும் தத்தம் சமயத்தில் பற்றும் அழுத்தமும் உடையவர்களாய் இருப்பதில் தவறில்லை; ஆயின், புறச்சமய - பிற சமயக்காழ்ப்பு கூடாது இதனைச் சைவம் ஏற்றுக் கொள்கிறது. திரு.வி.க. பின்வருமாறு கூறுகிறார். சைவ சித்தாந்தம் தனித்தும், எல்லாச் சமயங்களிலும் ஊடுருவிப் பாய்ந்தும் நிற்பது; எல்லாச் சமயங்களும் சேர்ந்த ஒன்றே

சைவசித்தாந்தம் என்றும் கூறலாம். இச்சித்தாந்தத்தில் வேற்றுமைக்கு இடமில்லை. சந்தான குரவருள் ஒருவராம் அருள்நந்தி சிவாசாரியார்,

*"ஓது சமயங்கள், பொருளுணரும் நூல்கள்*
*ஒன்றோடொன்று ஒவ்வாமல் உள பலவும்; இவற்றுள்*
*யாது சமயம்? பொருள் நூல் யாது? இங்கு என்னில்*
*இதுவாகும் அதுவல்ல எனும் பிணக்கது இன்றி*
*நீதியினால் இவை எல்லாம் ஓரிடத்தே காண*
*நிற்பது யாதொரு சமயம் அது சமயம், பொருள்நூல்"*

என்று அருளியிருப்பதும் காண்க.

உண்மைச் சமயம் எது? என்பது பற்றி இதுகாறும் கூறப்பெற்ற ஆன்றோர் அருள் மொழிகளை நோக்கின், திருக்குறள் சமயதத் துவத்தில் எத்தகைய இடம் பெறவல்லது என்பது தெளிவாகும்.

எல்லாச் சமயத்தவரும் திருக்குறளை உரிமை கொண்டாடு கின்றனர் என்பது அந்நூலின் பொதுத்தன்மையையும் சமரச நோக்கினையும் உணர்த்துவதாகும். ஒழுக்கவியல், பொருளியல், சமூகவியல், போன்ற பல துறைகளிலும் பல்வேறு வகையில் திருக்குறள் இன்னா செய்யாமை, நேர்மை முதலிய பண்புகளையே வற்புறுத்துகிறது. இது பழந்தமிழ்ப் பண்பாட்டின் பெட்டகம். பௌத்தர், சமணர், சைவர், வைணவர் முதலிய யாவரும் விரும்புவதால் திருக்குறள் ஒரு பொதுமறை என்பதில் ஐயமில்லை.

"The fact, that Tirukkural is claimed by different religious sects, indicates its catholicity. Its emphasis on Ahimsa or Non-violence, its varied applications, ethical, economic and social, shows the importance which ancient Tamil culture gave to it. Tirukkural is used by the Bhudists, the Jains, the saivites and the vaishnavits. It is called Podumarai or Common Scripture." Dr. Sir. S. Radhakrishnan என்கிறார் திரு. இராதகிருஷ்ணன்.

இனி, திருவள்ளுவர் அருளிய கடவுள் வாழ்த்து முதற்குறள் இதற்குச் சான்றாம்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

இக்குறட்பாவில் வரும் பகவன் என்பது ஒரு பரியாயச் சொல்; பல கடவுளரையும் குறிப்பதாகும்.

"பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்" என்பது நிகண்டு. அனைத்துச் சமயங்களுக்கும் பொருந்துமாறு பரம்பொருள் வாழ்த்தே கூறப்படுகிறது. சைவர்கட்கும் இது உடன்பாடே: மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவர் கடவுள் என்பதனை,

"மூவராய முதல் ஒருவன்"
"மூவர்கோன்"
"மூவர்க்கும் முதல் ஆனோன் காண்"
மூவரும் அறிகிலர்"

எனச் சைவமும்,

"மூவராகிய மூர்த்தியை"
"மூவர்க்கும் முதல்வன் தன்னை"

என வைணவமும் முழங்குகின்றன. இறைவனாம்பரம் பொருள் ஒன்றே என்பதைப் புறச் சமயங்களும் உடன்படுகின்றன.

திருவள்ளுவர் தன்னை இன்ன சமயத்தவர் என வெளிப் படையாகக் கூறவில்லை; தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளவில்லை. ஆனால், திருவள்ளுவர் சிலர் கருதுவது போல சமயத்தைப் புறக்கணித்தவர் அல்லர். அவர்காலத்தில் சைவம், வைணவம், சமணம், பௌத்தம், உலகாயதம் முதலிய பல வேறு சமயக் கோட்பாடுகள் சமுதாயத்தில் நிலவின. இதனை மறத்தல் கூடாது. வரலாறு, சமுதாயம் இவற்றின் விளைபொருள் தான் ஒரு பேரிலக்கியம். அது திருக்குறளுக்கும் பொருந்தும். திருக்குறள் உணர்த்தும் கோட்பாடுகளை நடுநின்று ஆய்ந்து ஒரு முடிவுக்கு வருதலே நன்று. புதிய சிந்தனையாளர் சிலர் திருவள்ளுவருக்கும் சமயத்திற்கும் தொடர்பில்லை எனக் கூறி அதற்கு எடுத்துக்காட்டாகக் கல்லாடர் கூறியுள்ள சில அடிகளை மேற்கோள் காட்டி வாதிப்பர்; அவ்வடிகள் வருமாறு.

*"சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப்*
*பொருள் இதுவென்ற வள்ளுவர்"*

என்பதாம். கல்லாடர் சிறந்த சிவநெறிச் செல்வர் என்பதனையும் அவர் அருளிய கல்லாடம் சைவ நூல் என்பதனையும் மறந்து விடுகின்றனர். இவன் அடிகளுக்குப் பிறழப் பொருள் கொள்கின்றனர் அச்சாரார். இதன் உண்மைப் பொருள் வருமாறு:

பக்தி இயக்கம் பரப்பத்தோன்றிய அருளாளர்களாகிய சமயக்குரவர் நால்வரும், ஆழ்வாராதியர் பன்னிருவரும் போன்றோ

மணிமேகலை ஆசிரியர் சாத்தனர், தொண்டர் புராணம் அருளிய சேக்கிழார் அடிகள் போன்றோ வெளிப்படையாகச் சமயக்கருத்துக்களை வெளியிடாமல், மக்களின் வாழ்க்கை நெறியை விளக்குமுகத்தால், இலை மறை காயாக சமயக் கருத்துக்களைப் புலப்படுத்தி மெய்ப்பொருள் அல்லது செம்பொருள் இது எனக்காட்டியவர் திருவள்ளுவர் என்பது புலப்படும்.

மேலும் திருக்குறளை முறையாகவும் நுணுக்கமாகவும் கற்போர் இது திருவருட் பேற்றுக்கு வழி காட்டும் மெய்ந்நூல் என்பதனைப் பழம்பாடல் ஒன்று.

*"வள்ளுவர் சீர் அன்பர் மொழி வாசகம் தொல் காப்பியமே*
*தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை - ஒள்ளிய சீர்த்*
*தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்*
*தண்டமிழின் மேலாம் தரம்".*

என்று தெய்வத் திருநூல்களுள் ஒன்றாக வைத்துப் போற்றியுள்ளது மனங்கொள்ளத்தகும்.

மேலும், உக்கிரப் பெருவழுதியார்

*"நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளாய்*
*நான்முகத்தோன்*
*தான் மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த - நூல்முறையை*
*வந்திக்க சென்னி, வாய் வாழ்த்துக, நன்னெஞ்சம்*
*சிந்திக்க, கேட்க செவி "*

எனப் பாராட்டு முகத்தான் திருக்குறள் மெய்ப்பொருளை விளக்க எழுந்த நூல் என்பது விளங்கும். அன்றியும்,

*"தெய்வப் புலமைத் திருவள்ளுவர் குறளில்*
*உய்விக்கும் நூலெல்லாம் உள்ளதெனச் - செய்வித்தான்*
*தத்துவமெல் லாம் உடம்பில் தந்துணர்வார் போலுலகம்*
*ஒத்தபரி மேலழகன் ஓர்ந்து"*

என்ற ஆன்றோர் வாக்கும் சிந்திக்கத்தகும். இது காறும் கூறிய புறச்சான்றுகளால், திருக்குறள் தெய்வநூல் என்பதும், மெய்ப்பொருள் உணர்த்தும் தத்துவநூல் என்பதும், இதனைக் கற்று உணர்ந்தாலே எல்லாச் சாத்திர தோத்திர நூல்களையும் உணர்ந்ததாகும். என்பதும் புலனாம்.

இனி, திருக்குறளிலிருந்தே சில அகச் சான்றுகள் காண்போம். இந்நூலின் முதல் நான்கு அதிகாரங்களாகிய கடவுள் வாழ்த்து,

வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்பன ஆழ்ந்த சிந்தனைக்கு உரியன. அதன் பின் வரும் 129 அதிகாரங்களும் அந்நான்கன் அடிப்படையிலே அமைந்துள்ளன என்பது சிந்தனையாளர்க்கும் புலப்படும் பொருட்பாலும் காமத்துப்பாலும் அறத்தின் வழிப்பட்டனவேயாம். அறஞ்சாரா மேநாட்டு அரசியல் போன்றோ பொருளியல் போன்றோ காதல் போன்றோ திருவள்ளுவர் இவற்றை அமைக்கவில்லை. அற உணர்வே அனைத்திலும் ஊடுருவி நிற்கக் காணலாம். "சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம்போல" எனவும் அறநெறி முதற்றே அரசின் கொற்றம் எனவும், "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை" எனவும் முறையே புறநானூறும் தொல்காப்பியமும் கூறியுள்ள விழுமிய கருத்துக்கள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. திருவள்ளுவர் பெரும்பாலும் தொல்காப்பி யரைப் பின்பற்றியுள்ளார். கடவுள் வாழ்த்து முதலிய நான்கு அதிகாரங்களும் தொல்காப்பியத்தில் வரும்,

*"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் மேலன மூன்றும்*
*கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே"*

என்னும் சூத்திரத்தைப் பின்பற்றி எழுந்ததெனக் கொள்ள இடமுண்டு.

ஆராய்ச்சிப் பேரறிஞர் மு. இராகவய்யங்கார் கொடிநிலை என்பது மேகம் எனப் பொருள்படும் என்பர். மின்னற்கொடி தோன்றுதற்கு இடனாதல் பற்றி மேகம் அப்பெயர் பெற்றது. எனவே கடவுள் வாழ்த்தினை அடுத்து வான் சிறப்பு வைக்கப்பெற்றது. நீத்தார் பெருமை என்பது முற்றத்துறந்த முனிவரது பெருமை என்பர் பரிமேலழகர். அறம் முதலியவற்றை உலகிற்கு உள்ளவாறே உணர்த்துவார் அவராகலின் இது வான் சிறப்பின் பின் வைக்கப்பெற்றது என்பார். இனி வள்ளி என்பது வண்மையின் அடிப்படையில் பிறந்த சொல் என்பது தெளிவு. ஈதலறம் என்றும் ஈவார் மேல் நிற்கும் புகழ் என்றும் கூறப்படுவதால் வள்ளி என்பது அறத்தை உணர்த்தும் என்பதாம். உணர்த்தவே வள்ளி என்பது அறத்துக்குரிய தெய்வம் என்பதாயிற்று. வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் இம்மூன்றும் கடவுள் வாழ்த்தோடு என்று பேசப்படுதலால் முதன்மை கடவுள் வாழ்த்துக்கே என்பது தெளிவாகும். இம் முறையிலேயே பாயிரம் அமைந்துள்ளது என்பது அறியத்தகும்.

இனித் திருவள்ளுவர் கூறும் கடவுள் தன்மை எத்தகையது என்பது காணத்தகும். சைவ சித்தாந்தம் கூறும் பதி இலக்கணங்கள் பெரும்பகுதி கடவுள் வாழ்த்தில் அமைந்திருத்தலைக் காணலாம். கடவுள், பரம்பொருள், சிவம் என்பன ஒரு பொருட் பன்மொழிகள். சிவம் என்பது மூவர்க்கும் முதல்வனாம் பரம்பொருளை அல்லது திருவருளைக் குறிக்கும் சொல்லாகும். மனம், மொழி, மெய் ஆகியவற்றை கடந்து நிற்பதால் இறைவன் கடவுள் எனப்பட்டார். திருவள்ளுவர் இப்பரம் பொருளாகிய பதியின் இயல்புகளைப் பின்வருமாறு குறித்துள்ளார்.

III பதிஇலக்கணம்

1. ஆதி பகவன்: (முதல்வன்): உயிர்களின் வினைகளுக்கு ஏற்பப் பயன்களைப் பகிர்ந்தளிப்பவன். நல்ல தமிழ்ச்சொல் ‘பகு’ என்பது வேர்ச்சொல்.

2. வாலறிவன்: தூய அறிவினன்; அறிவே சிவம்

3. மலர் மிசை ஏகினான்: தூய அன்பர்தம் உள்ளத் தாமரையில், அன்பர் நினைத்த வடிவில் காட்சி தருபவன்; ஏகினான் என்பதால் அவனது எளிவந்த தன்மை விளங்கும்.

4. வேண்டுதல் வேண்டாமை இலான்: விருப்பு வெறுப்பு அற்ற நிலை சுட்டப்பட்டது.

5. இறைவன்: ‘இறு’ என்பதன் அடியாகப் பிறந்து, யாவரிடமும் தங்கியிருப்பவன் என்பது பொருள். இறுத்தல் - நீக்க மற நிறைதல்.

6. பொறிவாயில் ஐந்தவித்தான் - ஐவகை அவாவினை அறுத்தவன்; மெய்ந்நெறியை உணர்த்தியவன்; (பொய்தீர் ஒழுக்க நெறி)

குறிப்பு: இத்தகைய சிவனை (இறைவனை) நினைத்தலும், வாழ்த்தலும், அவன் நெறி நிற்றலும் செய்தார் வீடு பெறுவர் எனப் பரிமேலழகர் எடுத்துக் காட்டுவதும் காண்க.

7. தனக்குவமை இல்லாதான்: இறைவன் ஒப்பிலி அப்பன் அவனுக்கு உவமை அவனே. எல்லாம் கடந்தவன்; எல்லாவற்றிலும் கலந்துள்ளவன்.

8. அறவாழி அந்தணன்: பல்வேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் வடிவமாக உடையவன்.

9. எண்குணத்தான்: எட்டுத் தலையாய குணங்களை உடையவன்.

1. தன் வயத்தன் ஆதல்

2. தூய உடம்பினனாதல் (ஞானத் திருமேனி)
3. இயற்கை உணர்வினன் ஆதல்
4. முற்றும் உணர்தல்
5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்
6. பேரருளுடைமை
7. முடிவில் ஆற்றலுடைமை
8. வரம்பில் இன்பம் உடைமை

என இவை எட்டுமாம். இவ்வாறு சைவாகமத்தில் கூறப்பட்டது எனப் பரிமேலழகர் சுட்டிக் காட்டியிருப்பது உணர்ந்து மகிழத்தகும். கடவுள் வாழ்த்து இறுதிக்குறள்,

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்"*

என்பது. இக்குறளால், "உலகியல்பினை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்கு பிறவி அறுதலும், அவ்வாறு அன்றி, மாறி நினைப்பார்க்கு அஃது அறாமையும் ஆகிய இரண்டும் நியமிக்கப் பட்டன" எனப்பரிமேலழகர் கூறுவது மனங் கொள்ளத்தகும்

மேலே விளக்கியவாறு கடவுள் வாழ்த்து அதிகாரத்திலும், பிற இடங்களிலும் வரும் பதியின் இலக்கணங்களை ஊன்றி உணர்ந்தால், சித்தாந்த சாத்திரங்கள் கூறும் பதியிலக்கணங்கள் திருக்குறளில் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன என்பது புலப்படும்.

இனி மெய்கண்ட சாத்திரங்கள் கூறும் பதி இலக்கணம் இங்கு ஒப்பு நோக்கி மகிழத் தக்கது: இலக்கணங்கள் பின் வருமாறு:

*இறைவனுக்கு (பதி) மூவகை நிலைகள்:*

1. எல்லாம் கடந்த நிலை
2. எல்லாவற்றிலும் கலந்த நிலை

3. ஐந்தொழில் (ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) இயற்றவும் மெய்யன்பர்கட்குக் காட்சி கொடுத்துத் தேற்றவும் உருவத் திருமேனி கொள்ளும் நிலை.

இறைவன் எடுக்கும் திருமேனி ஞானத்திருமேனியாம், ஊனுத் திருமேனி அன்று "பிறவா யாக்கைப் பெரியோன்" - இதில் பிறவா யாக்கை ஞானசரீரம் இறைவன் உருவொடு தோன்றினும் எளிவந்து நின்று ஆன்மாக்கட்கு அருள் புரிந்தாலும், ஒரு நாளும் இறைவன் எண் குணங்கட்கு மாறுபட்ட நிலையை அடையமாட்டான் என்பதே

சைவ சமயத்தின் கோட்பாடு. அவன், சிவம், சக்தி என ஒருமையில் இருமையாய் அமைந்திருப்பவன் எனச் சித்தாந்தம் கூறும்.

பொன்னும் அதனால் செய்யப்படும் அணிகலன்களும் பெயர்களாலும் உருவங்களாலும் வேறுபட்டாலும், தன்மையால் பொன் என்னும் ஒரு பொருளாகவே இருக்கும். அதுபோல, இறைவனாகிய பதியும் அவன் தன்னிச்சையால் எடுக்கும் ஐந்தொழில் திருமேனிகளும் நாம, ரூபங்களால் வேறுபட்டாலும் எண்குணங்களினின்று வேறுபடுவதில்லை. இறைவன் ஒருவனே எண்ணிறந்த திருமேனிகள் கொள்கிறான் என உணர்தல் வேண்டும்.

திருவாசகம் அருளிய மணிவாசகரும், தெள்ளேணப் பகுதியில்
"*ஒரு நாமம் ஒருருவம் ஒன்றும் இல்லார்க்கு ஆயிரம்*
*திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ*"
எனப் போற்றியிருப்பதும் நோக்குக.

இனிப் பசுவின் (உயிரின்) இலக்கணம் காண்போம்.

IV பசு இலக்கணம் சைவ சித்தாந்தம் பின்வருமாறு கூறும்:
ஆன்மா அறிவிக்க அறிவது

ஆன்மாவை அறிந்து கொள்ள சித்தாந்தம் மூன்று உவமைகளைக் கூறும்

1. பூவில் மணம்
2. இருள் ஒளி அலாக்கண் (இருளோடு சேர்ந்தால் இருளாகியும் ஒளியோடு சேர்ந்தால் ஒளியாகியும் இரட்டைத்தன்மை உடையது.)
3. பன்னிறம் காட்டும் படிகம்: (படிகக்கல்; கண்ணாடி அன்று).

1. பூவில் மணம்:

பூவிலிருந்து மணத்தைப் பிரித்து அறிய முடியாது; தனித்துக் காண முடியாது. பூ வேறு; மணம் வேறு; எனினும் மணத்தைப் பிரித்துக் காண முடியாது. அதுபோல உடல்வேறு; உயிர்வேறு. ஆயினும், உயிர் பிரித்துக் காண முடியாத நிலையில் இருப்பதைக் காண்கிறோம்.

திருவள்ளுவர் காமத்துப்பாலில், காதற்சிறப்பு உரைத்தல் என்ற அதிகாரத்தில் பிரிவச்சம் கொண்ட தலைவியைத் தேற்றும் வகையில் தனது நட்பின் (அன்பின்) பிரிக்கமுடியாத தன்மையைத் தலைவன் கூறுவதாக வரும்.

*"உடம்பொடு உயிரிடை என்ன மற்றன்ன*
*மடந்தையொடு எம்மிடை நட்பு"*

குறட்பா இங்கு ஒப்பிடத்தகும். பூவும் மணமும் வேறுவேறு பொருள்கள் போல தானும் தலைவியும் உடம்பால் வேறுபடினும் உள்ளத்தால் ஒன்றே என்பது உணர்த்தும் நிலை அறியத்தகும். ஈருடல் ஓருயிர்.

2. இருள் ஒளி அலாக்கண்:

கண்ணுக்குத் தன் தன்மை என்பதொன்று இல்லை. இருளோடு சேர்ந்தால் இருளாகியும், ஒளியோடு சேர்ந்தால் ஒளியாகியும் இரட்டைத் தன்மை உடையதாக இருக்கிறது கண்.

கண்ணுக்கு ஒளி இயற்கையானால், இருளிலும் பொருளைக் காணவேண்டும். அல்லது கண்ணுக்கு இருள் இயற்கையானால் ஒளியைச் சார்ந்தாலும் காணமுடியாத நிலையில் இருத்தல் வேண்டும். இது ஒரு வியப்பான நிலை.

இவ்வாறே ஆன்மாவும் (பசு) பாசத்தோடு சேர்ந்தால் பாசம் போலவும், பதியினைச் சார்ந்தால் பதிபோலவும் மாறக்கூடிய இரட்டைத் தன்மை வாய்ந்தது என உணர்கிறோம். இது சார்ந்ததன் வண்ணம் எனப்படும்.

அஃதாவது, உலகத்தைச் சார்ந்து கிடைத்த உடம்பின் தகுதிக்கு ஏற்ப உலகத்தையும் அனுபவிக்கும்; காலப்போக்கில் இறைவனைச் சார்ந்து பேரின்பத்தையும் அனுபவிக்கும். இவ்வாறு சிவப்பிரகாசம் என்னும் மெய்ந்நூல் கூறுகிறது.

3. பன்னிறம் காட்டும் படிகம்:

படிகம் என்பது ஒருவகைக் கல்; படிகக் கல். சூரியன் கிழக்கில் அல்லது மேற்கில் சாய்ந்து தோன்றும் போது, தனக்குக் கீழே, எந்த நிறமுடைய பொருள் இருந்தாலும், அந்த நிறம் படிகக்கல் முழுதும் ஊடுருவித் தோன்றும். அப்போது படிகத்தின் நிறமே தோன்றாது.

ஆனால் சூரியன் நேர் உச்சியில் இருக்கும்போது படிகக்கல்லின் கீழ் எப்பொருள் இருந்தாலும், அப்பொருள்களின் நிறங்கள் அக்கல்லில் ஊடுருவித் தோன்றுவதில்லை. தன் வண்ணமாகவே ஒளியோடு ஒளியாய்ச் சேர்ந்து தோன்றும்.

அதுபோலவே, ஆன்மாவும் திருவருட்சத்தியை நீங்கி

இருக்கும்போது, பாசம் அதனைத் தாக்கப் பாசமாகவே உணரும். ஆனால் திருவருட் சத்தியை நேர்பட்ட போது, ஆன்மா ஒளியோடு கூடிய ஒளிப் பொருள் போலவே தோன்றும்.

வேதாந்த, சித்தாந்த வித்தகராம் தாயுமானவரும் தாம் அருளிய ஒழிவில் ஒடுக்கம் என்ற நூலில் பின்வருமாறு கூறியுள்ளார்:

"ஆன்மா சார்ந்ததன் வண்ணம். ஆதலால் எந்த உடம்பை எடுக்கிறதோ அந்த உடம்பின் தொழிலைச் செய்யும்; அஃது எடுக்கும் உடம்பு வேறுபாடு காரணமாகத்தான், நடப்பன, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன எனச் சாதிவேறுபாடுகள் உண்டாகின்றன".

உலகில் காணப்படும் உயிர்ப்பன்மைகள் ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு உயிர்வரைப் படிமுறையாக வைத்து எண்ணப் படுகின்றன. ஆன்மா தன்வினை வேறுபாட்டுக்கு ஏற்ப வெவ்வேறு வகையான உடம்புகளைப் பெறுகின்றன. சைவ சமய நோக்கில் தொல்காப்பியத்தைப் படித்தால் பல உண்மைகள் புலப்படும். உயிர் வகைகளை ஆறாகப் பிரித்து அவற்றின் தொழில்களை விவரிக்கும் பான்மை வியக்கத்தக்கது. அவர், மரபியலுள் பின்வருமாறு உயிர்களை வகைப்படுத்தியுள்ளார்.

*"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே"*

என்பது தொல்காப்பிய நூற்பா. எந்தஎந்த உயிரினங்கள் இப்பாகுபாட்டில் அடங்கும் என்பதையும் விவரித்துள்ளார் கடைசியில்

*"மக்கள் தாமே ஆறறி உயிரே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"*

என்கிறார். சிந்தித்து நன்று தீது பிரித்துணரும் மனவுணர்வினை மக்கட்கு அருளியுள்ளார் இறைவன். படிப்படியாக உயிர்கள் மேலும் மேலும் உயர்ந்த மனித நிலையை அடைகின்றன. இதிலிருந்து பிறப்புக்கள் பல என்பது தெளிவாகும். மணிவாசகப் பெருந்தகை தாம் அருளிய சிவபுராணத்துள்,

*"பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்*
*புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள்*
*எல்லாப்பிறப்பும் பிறந்து இளைத்தேன்*
*மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"*

என்ற அருட்புலம்பலை உன்னுதல் வேண்டும். இதனைத் திருவள்ளுவர்,

*"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்*
*தொகுத்த வற்றுளெல்லாம் தலை"*

என அருளியுள்ளார். இக்குறட்கு உரை வகுத்த பரிமேலழகர், பல்லுயிர் என்பதற்கு ஐவகை உயிர்களையும் ஓம்புதல் எனக்கூறியிருத்தலும் ஒப்பு நோக்கத்தகும்.

உயிராகிய பசு பற்றி மேலே கூறப்பட்ட கருத்துக்களின் பின்னணியில் திருக்குறளில் உயிர் பற்றி வரும் சித்தாந்தக் கருத்துக்களைக் காண்போம்.

பொழுதுகண்டு இரங்கல் எனவரும் காமத்துப்பால் அதிகாரத்தில் பொருள் வயின் பிரிந்து சென்ற காதலர் திரும்ப வேண்டும் காலம் கழிந்தும் வாராமையில் தலைவி இரங்கிக் கூறுவது இக்குறட்பா.

*"பொருண்மாலை யாளரை உள்ளி மருண்மாலை*
*மாயும்என் மாயா உயிர்"*

இங்கு வரும் மாயா உயிர் என்னும் தொடர் உயிர் அழிவில்லாதது; என்றும் இருப்பது என்னும் சித்தாந்த உண்மையை விளக்குவதாகும். இனி,

*"தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மன்னுயிர்க்கு எல்லாம் இனிது"*

எனவரும் குறட்பாவில் மன்னுயிர் என்பதும் மேலே கண்ட உண்மையை வலுப்படுத்துவதாகும்.

புலால் மறுத்தல் என்ற அதிகாரத்தில் வரும்,

*"கொல்லான் புலால் மறுத்தானைக் கைகூப்பி*
*எல்லா உயிரும் தொழும்"*

குறட்பாவில் எல்லா உயிரும் என்பது உயிர்கள் பல எனும்

சாத்திர உண்மையைப் புலப்படுத்தும். அன்றியும் இத்தொடர் ஓரறிவுயிர் முதலிய ஆறறிவுயிர் வரை உள்ள அனைத்து உயிரினங்களையும் குறிப்பது காண்க.

இனித் துறவு என்ற அதிகாரத்தில் வரும்

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*

என்னும் குறளில், உயிராகிய ஆன்மா ஒரு தலைவனை உடையது என்பதும் பெறப்படும். அன்றியும் வீடுபேறு அடைதற்குப் பற்றற்ற திருவருளின் துணை வேண்டும் என்பதும் புலப்படும். மேலும், நிலையாமை உணர்த்தவந்த திருவள்ளுவர்,

*"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்*
*துச்சில் இருந்த உயிர்க்கு"*

என்னும் குறளில், உயிராகிய ஆன்மா ஒரு தலைவனை உடையது என்பதும் பெறப்படும். அன்றியும் வீடுபேறு அடைதற்குப் பற்றற்ற திருவருளின் துணை வேண்டும் என்பதும் புலப்படும். மேலும், நிலையாமை உணர்த்த வந்த திருவள்ளுவர்,

*"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்*
*துச்சில் இருந்த உயிர்க்கு"*

என்கிறார். இதன் பொருள் கவனத்திற்கு உரியது. வாதம், பித்தம், சிலேத்துமம் (காற்று, கோழை, பித்தம்) ஆகிய மூன்றுக்கும் உரிமை உடையது. உடம்பு; உடம்பு மூவர் சொத்து. இம்மூவரும் இசைவளிக்கும் அளவு உயிர் உடம்பில் தங்கலாம். மூவருள் ஒருவர் மாறுபட்டாலும், உயிர் தங்க இயலாது; வாடகை கொடுத்தாலும் முடியாது. இவ்வாறு ஒருடம்பாலும் நிலைபெற்று இருக்க முடியாமல் பிறப்புப் பல எடுத்து அலைந்து திரியும் இவ்வுயிருக்கு எப்போதும் உரிமையோடு குடி இருக்கும் சொந்த வீடு அமையவில்லையே என்று உயிருக்கு இரங்குவதாக இக்குறள் அமைந்துள்ளது. உயிருக்கு உரிமையான வீடு இறைவனது பேரின்பமாகிய வீடே என்பது புலப்படுத்திய வாறாயிற்று. இதனால் உயிர் பல பிறவிகள் எடுக்கும் இயல்பிற்று என்பது விளங்கும்.

இனி உயிராகிய ஆன்மா, அழியும் உடம்பின் மேல் மிகுதியான பற்று வைக்கும் அறியாமை உடையது என்பதனை ஓர் உலகியல் எடுத்துக்காட்டால் விளக்குகிறார் திருவள்ளுவப் பெருந்தகை.

அது வருமாறு: சூது என்ற அதிகாரத்தில்,

*"இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்*
*உழத்தொறூஉம் காதற்று உயிர்".*

"சூதாடலால் இருமைப் பயன்களையும் இழக்கும் தோறும், அதன்மேல் காதல் செய்யும் சூதன் போல, உடம்பால் மூவகைத் துன்பங்களையும் அனுபவிக்கும் தோறும், அதன்மேல் காதலை உடைத்து உயிர்" என்ற பரிமேலழகர் உரை நோக்கத்தகும். சூதனை அறியாமை கூற வந்த வள்ளுவர் உயிரினது அறியாமையும் உடன் கூறினார். அஃதாவது உடம்பின்மேல் அளவிறந்த பற்றுடையது உயிர் என்பது வலியுறுத்தப்பட்டது. இதுவும் சைவ சித்தாந்திகளுக்கு இசைந்த ஒன்றே.

இனி கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் வரும்,

*"இருள்சேர் இருவினையும் சேரா;*
*இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு."*

என்னும் குறட்பாவில், மயக்கம் பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும் இறைவனது திருப்புகழை எப்போதும் ஓதுவார்க்கு உண்டாவதில்லை என்பது உணர்த்தப் பட்டது. நல்வினையும் பிறவிக்கு ஏதுவாகலின் அதுவும் சேராது எனப்பட்டது. இதனால் இருவினைக்கட்டு உயிர்க்கு உள்ளது என்பதும், விளக்கப்பட்டது. ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதும் மயக்கம் அஞ்ஞானம் அல்லது அவிச்சை எனப்படும். இதனை இருள் என்றார் வள்ளுவர். இதுவும் பிறவிக்கு ஏது என்பது தெளிவு. அன்றியும்,

*"பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும்*
*மருளானாம் மாணாப் பிறப்பு"* எனவும்,
*"நில்லாத வற்றை நிலையின என்றுணரும்*
*புல்லறி வாண்மை கடை"* எனவும்

வரும் குறட்பாக்களில், மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய் என்று உணரும் மருள் உயிர்க்கு உண்டு என்பது பெறப்பட்டது. இருள், வினை, மருள், என்பனவே ஆணவம், கன்மம், மாயை என ஆகமங்களில் கூறப்பட்டது என்பர்.

இனி, உயிர் என்பது சார்ந்ததன் வண்ணம் என்பதனைப் பின்வரும் குறட்பா நன்கு வலியுறுத்துவது காண்க.

*"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு*
*இனத்தியல்பதாகும் அறிவு"*

தான்சேர்ந்த நிலத்தினது தன்மையாலே நீரானது தனது தன்மைமாறி, தான் விழுந்த நிலத்தின் தன்மையதாகும். அதுபோல மாந்தர்க்கு தாம் சார்ந்த இனத்தின் இயல்பாலே, அறிவு திரிந்து அவ்வினத்தின் தன்மையதாகும். இதனால் உயிர் எதனை சார்கிறதோ அதன் வண்ணமாக மாறும் தன்மையது என்பதாம்.

V பாச இலக்கணம்

இனிப் பாசத்தால் கட்டுண்டு கிடக்கும் உயிர், தான் நிலையாயின என்று மயங்கி உணரும் சிலவற்றின் நிலையாமையை உணர்ந்தாலன்றி, நிலையான வீட்டின்பத்தை உள்ளம் விழையாது ஆதலின், முதற்கண் யாக்கை (உடல்)யினது நிலையாமையைத் திருக்குறள் உணர்த்துகிறது.

*"நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும்*
*பெருமை உடைத்து இவ் வுலகு"* எனவும்,
*"ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப*
*கோடியும் அல்ல பிற"* எனவும்

வரும் குறட்பாக்களை ஓர்ந்து உணர்க. திருமூலரும் யாக்கை நிலையாமை பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்.

*"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்*
*பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்*
*சூரையம் காட்டிடைக் கொண்டு போய்ச் சுட்டிட்டு*
*நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே"*

என்பது திருமந்திரம். இனிச் செல்வம் நிலையாமையைத் திருவள்ளுவர்,

*"கூத்தாட்டு அவைக்குழாத்து அற்றே பெருஞ்செல்வம்*
*போக்கும் அது விளிந்தற்று"* எனவும்,
*"அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்*
*அற்குப ஆங்கே செயல்"* எனவும்

செல்வம் நிலையாது என்று கூறி, ஈட்டியவர்கட்கும் பிறர்க்கும் பயன்படுதல் இல்லாத செல்வத்தினது இயல்பு உணர்த்து முகத்தால்,

*"ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்*
*தோற்றம் நிலக்குப் பொறை"* என உலோபிகளின்

தன்மையை இழித்துக் கூறியுள்ளதும் காணத்தகும். திருமூலரும்,

*"வாழ்வு மனைவியும் மக்கள் உடன்பிறந்*
*தாரும் அளவேது எமக்கென்பர் ஒண்பொருள்*
*மேவும் அதனை விரிவுசெய் வார்கட்குக்*
*கூவும் துணையொன்று கூடலும் ஆமே"*

என்றருளினார்: அஃதாவது, இவன் இறந்து கிடந்ததும் பொருளைப் பங்கு பிரிப்பதில் போட்டியடுவரே அன்றி, இவனுக்குக் கூப்பிடும் துணை ஆகா என்பதாம். ஔவையாரும்,

*"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்த*
*கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் - கூடுவிட்டிங்கு*
*ஆவிதான் போயினபின் ஆரே அனுபவிப்பர்*
*பாவிகாள் அந்தப் பணம்"*

என இடித்துக் கூறுவதும் கவனத்திற்குரியது.

இனி, இளமையும் நில்லாது என்பதைப் பற்றித் திருமூலர்,

*"பாலன் இளையன் விருத்தன் என நின்ற*
*காலம் கழிவன கண்டும் அறிகிலார்*
*ஞாலம் கடந்து அண்டம் ஊடறுத்தான் அடி*
*மேலும் கிடந்து விரும்புவன் நானே"*

எனக் கூறியிருப்பதும் உணரத்தகும். நாவுக்கரசரும்

*"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க்கோதை மாதர்தம்*
*மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து*
*கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்*
*சேலுலாம் பழன வேலித் திருக்கண்டீச் சுரத்துளானே"*

எனக் கழிந்தமைக்கு இரங்கலும் உள்ளுக.

இவ்வாறு நிலையாமை உணர்வு தோன்றிய பின்னர் படிப்படியாக பற்றுக்களை - ஆசைகளைக் களைய முற்படல் வேண்டும். பற்று அகப்பற்று, புறப்பற்று என இருவகைப்படும். யான் என்பது அகப்பற்று; உடம்பு பற்றியது; எனது என்பது புறப்பற்று; உடைமை பற்றியது. இவ்விருவகைப்பற்றும் துறத்தலே திருவள்ளுவர் கூறும் துறவாகும். "அற்றது பற்றெனின் உற்றது வீடு" என்பது ஆன்றோர் வாக்கு.

*"யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு*
*உயர்ந்த உலகம் புகும்"*

என்பது துறவில் வரும் குறட்பா. தான் அல்லாத உடம்பை யான் என்றும், தன்னோடு இயைபு இல்லாத பொருளை எனது என்றும்

கருதி, அவற்றின் மீது பற்றுச் செய்தற்கு ஏதுவாகிய மயக்கத்தைக் கெடுக்க வல்லவன் வீட்டுலகை அடைவான் என்பது இக்குறளின் கருத்தாகும். இதனால், இருவகைப் பற்றினையும் விட்டார்க்கே வீட்டுப்பேறு கிட்டும் என்பது கூறப்பட்டது.

இனி, மெய்யுணர்தல் என்ற அதிகாரம் நம் கவனத்திற்கு உரியது. இத்தொடர், மெய்யை உணர்தல் எனவும், மெய்யால் உணர்தல் எனவும் பொருள்கொள்ள இடம் தருகிறது. மெய் என்பது மெய்ப்பொருளாம் இறைவனையும், மெய்யாகிய ஞானம் (தத்துவ ஞானம்) என்பதனையும் குறிக்கும். செம்பொருளாம் சிவத்தை உள்ளவாறு உணர்தற்கு, உலகியல் அறிவும் பொருள்நூல் அறிவும் போதா; ஆழ்ந்தகன்ற நுண்ணறிவாம் மெய்ஞ்ஞானம் வேண்டப்படும் என்பதாம். ஊனக்கல்வி தவிர்ந்த ஞானக் கல்வி தேவை. ஐயம் திரிபற்ற தெளிந்த தத்துவ ஞானம் இன்றியமையாதது.

*"ஐயறிவு அறிந்தவை அடங்கினவ ரேனும்*
*மெய்யறி விலாதவர்கள் வீடது பெறாரே"*

**எனச் சசிவர்ணயோதம் என்ற மெய்ந்நூல் உணர்த்துகிறது. இதனைத் திருவள்ளுவர்,**

*"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே*
*மெய்யுணர் வில்லா தவர்க்கு"*

**என. அருளிப் போந்தார். இங்கு ஐந்தாவதாகிய உணர்வு மனம். அஃது எய்தலாவது, மடங்கி ஒருதலைப்பட்டு தாரணைக்கண் நிற்றல்.** ஞானேந்திரியங்கள் ஐந்தன் வழியாக ஐம்புல ஞானத்தை உடைத்தாயிருப்பது மனனே: ஆதலால், ஐந்தாம் உணர்வு மனம் எனப்பட்டது: (தொல்காப்பியம் ஒப்பு நோக்குக.) தாரணை என்பது யோக அங்கங்களுள் ஒன்று; இடைவிடாது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் நான்கும் ஒருவகைப்பட்டு நிற்றல் தாரணை எனப்படும்.

மனம் அடக்கல் யோகமாயும், மயக்கறுத்தல் ஞானமாயும் இருத்தலால், மயக்கறுக்கும் ஞானமின்றி, மனம் அடக்கும் யோகத்தால் முத்தி (வீடு பேறு) உண்டாகாது என்பது இதன் உட்கிடை.

**திருவள்ளுவர் இம்மெய்யுணர்தல் அதிகாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றைத் தெள்ளிதின் உணர்த்தியுள்ளார். வீட்டிற்கு நிமித்த காரணமாகிய முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று; அவை, கேள்வி, ஆராய்ச்சி (விமர்சனம்) கண்டுதெளிதல் (பாவனை)**

என்பன. இவற்றை மூன்று குறட்பாக்களால் விளக்கியுள்ளார்.

*"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்*
*மற்றீண்டு வாரா நெறி"*

இக்குறட்பாவில் கேள்வி கூறப்பட்டது. இம்மக்கட்பிறப்பின் கண்ணே உபதேச மொழிகளை அனுபவமுடைய தேசிகர்பால் கேட்டு, அதனால் மெய்ப்பொருள் உணர்தல் கேள்வியாம் அடுத்துவரும்,

*"ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்*
*பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"*

குறளால் விமர்சனம் என்னும் ஆராய்ச்சி கூறப்பட்டது. ஞானகுருவின் பால் கேட்ட உபதேச மொழிப்பொருளை, ஒருவன் உள்ளம் தெளிய ஆராய்ந்து, முதற்பொருளை உணருமாயின் அவனுக்கு மீண்டும் பிறப்புள்ளதாக நினைக்கவேண்டா என்பது இதன் கருத்து.

மூன்றாவதாக,

*"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்பது அறிவு"*

என்பதால் பாவனை என்ற கண்டுதெளிதல் கூறப்பட்டது. பிறப்பிற்கு முதற்காரணமாகிய அவிச்சை (மயக்க அறிவு) கெட, வீட்டிற்கு நிமித்த காரணமாய் செவ்விய பொருளைக் காண்பதே மெய்யுணர்வு ஆகும்.

அநாதியாகிய அவிச்சையும், அதுபற்றி யான் என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டும் என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருளின்கண் செல்லும் ஆசையும் அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லும் கோபமும் எனக்குற்றங்கள் ஐந்தாகும். திருவள்ளுவர் சுருங்கக் கூறி விளங்க வைக்கும் உத்தியால், அகங்காரத்தை அவிச்சையிலும், அவாவினை ஆசையிலும் அடக்கி மூன்று எனக் கூறுவாராய்,

*"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்*
*நாமம் கெடக் கெடும் நோய்"*

என அருளியுள்ளார். இங்கு நோய் என்றது வினைப்பயன்.

இறுதியாக, அவா அறுத்தல் என்ற அதிகாரத்தில் வள்ளுவப் பெருந்தகை கூறும் அருள்மொழிகள் சிந்தனைக்குரியன.

இடையறாது ஞானநூல் கேட்டலாலும் பயில்தலாலும் மேற்கூறிய காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்று குற்றங்களும் காட்டுத் தீ முன்னர்ப் பஞ்சுபோல் அழிந்தொழியும். இக்குற்றங்களே வினைகளுக்குக் காரணம். இக்காரணங்கள் இல்லையாயின் பின் அவற்றின் காரியமாகிய வினைகளைச் செய்யாமையின், வரக்கடவதாகிய துன்பங்களும் இல்லையாகும். மெய்யுணர்வின் பயனாக முன் கிடந்த துன்பங்களும் (சஞ்சிதம்), மேல் வரக்கூடிய துன்பங்களும் (ஆகாமியம்) இலவாகும். ஆகவே மெய்யுணர்வார்க்கு எஞ்சி நிற்பன உடம்பும், அதுகொண்டவினைப் பயனுமே (பிரார்த்தம்) ஆகும்.

ஒருகாலும் அமைதியுறாத அவாவினை ஒருவன் நீக்கிவிட்டால், அவனுக்கு அப்பொழுதே வீடுபேறு கிட்டும் என்பதனை,

*"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே*
*பேரா இயற்கை தரும்"*

எனத் திருவள்ளுவர் அருள்வாராயினர். திருவாய்மொழியும்,

*"சென்றாங்கு இன்பதுன்பங்கள் செற்றுக் களைந்து*
*பசையாற்றால், அன்றே அப்போதே வீடு"*

எனக்கூறுவது இங்கு ஒப்புநோக்கி மகிழத்தகும்.

## செந்தமிழ் ஆசிரியர் குழு

பேரறிஞர். நா. பாலுசாமி
பேரறிஞர். தமிழண்ணல்
பேரறிஞர். செ. கந்தசாமி
டாக்டர். ந. சேதுராமன்
பேரறிஞர். ம.ரா.போ. குருசாமி
பேரறிஞர். கதிர். மகாதேவன்
பேரறிஞர். அ.அ. மணவாளன்
பெரும் புலவர். இரா. இளங்குமரன்
பேரறிஞர். அ. தட்சிணாமூர்த்தி
பேரறிஞர். ந. வாசுகிராஜா
பேரறிஞர். இ.கி. இராமசாமி
பேரறிஞர். சே. அரிராமநாதன்
திரு. வே. திருவரங்கராசன்

